

உயிருளே இயங்கும நீயே
உளமுகத் தேவன ஆவாய்

மயலறு முனிவோர் செய்யும
அக்னி ஹோத்திரமும நீயே !

பயனதற்(கு) அருள வோயும்நீ
பயனுமாய் இருபபோ யுமநீ

மயர்விலா வேதங்கள் நீயே !
வேளவிகள நீயே ! கோவே !

—ஆதித்ய ஹ்ருதயம்

*தமிழாக்கம் ; கவிஞர் எம். ராஜ்*

# ஸப்தகிரி

பிப்ரவரி - 1990

தனிப்பிரதி ரூ. 1 மலா 20

வருடச் சந்தா ரூ. 12 இதழ 9

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முனனட்டை | சூாய மணடல நாயகனைக ஏழுமலையான |
| முதல உளஅட்டை | திருமலையில ஆநதிர மாநில முதல்வர் அவாகள |
| 2-வது உளஅட்டை | திருபபதியில் ஆநதிர மாநில முதல்வா அவர்கள |
| பினனட்டை | ஆடலரசனைக வெள்ளிமலையான |

சிறபபாசிரியர்
திரு. சிஎச் வெங்கடபதிராஜு IAS,
செயலாட்சித தலைவா,
தி தி தேவஸதானம, திருபபதி,

அசசிடுபவா
திரு. எம. விஜயகுமாா ரெட்டி,
மேலாளா,
தி தி தேவஸதான அசசகம,
திருபபதி.

ஆசிரியா
திரு. கே. சுபபாராவ், எம.ஏ

துணையாசிரியர்
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

Sasi

# உங்களுடன் . . . .

நீள் மலர்ந்தும், ஆகாயததில் ஆதவனின் ஒளிச்சுடர்கள் சிறிதேகூட மலராவிட்டால், மனிதனின் உடலும், உள்ளமும் சிறிதே முடங்கி விடுகிறது. மேலும நாள் முழுவதும கருமேகத்தால் வெண்மேகம் மூடபபட்டிருந்தால சிந்தனேயும், செயலும் மனிதனிடமிருந்து முழுவதுமாக ஆக்கப் பூர்வமாக செயலிழந்து விடுகின்றன. இதனே நாம் நம் அன்றுட வாழ்வில் பெறறிடும சாதாரண அனுபவமாகும். இவ் அனுபவமே 'சூரிய ஒளியானது மனிதனின் ஊட்டச் சத்து' எனபதைத் தெளிவுபடுததியது. இத்தெளிவினே விஞ்ஞானம நமக்கு நன்கு அறிவுறுத்தியதற்கு முனபே, இம மண் அப்பரிதியின் பெருமை நன்கு அறிந்திருந்ததால், பகலவன வழிபாடு ஒரு பழமையான வழிபாடாகவே அமைந்து விளங்குகிறது.

'உலகின் கண்ணுக, கண்கண்ட தெய்வமாக, கர்ம சாக்ஷியாக, நாளின பிறப்பாளனுக, காற்றுக்கும் கனலுக்கும் தலேவனுக, ஞான ஸ்வரூபியாக, ஆதவனே பவிஷ்ய புராணம புகழ்கின்றது. மூலபபொருளின மொத்த உருவமாக சாந்தோக்ய உபநிஷத் பகலவனேப் பெருமைப்படுத்துகிறது. வேத ஸ்வரூபியாக வேயோனே வேதங்கள் விதந்தோதுகின்றன. உயிர்களின் ஆனமாவாக விளங்கிடும் சூர்யனே 'ஞாயிறு போற்றுதும்' என்றும், 'பலா தொழத் தோன்றி ஏமுற விளங்கிய சுடரினும்' என்றும, 'உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு' என்றும பலவாறு பாராட்டுகின்றன தமிழ் இலக்கியங்கள்.

வெளிசசத்தைவிட இருட்டையே பாதுகாப்பாகக் கருதி வந்த அந்த 'இருண்ட காலத்தின'போது, வெப்பத்தையும் ஒளியினேயும் பாய்ச்சிட்ட அப்பகலவனேக் கண்டு மனிதன் உள்ளிட்ட பல உயிர்கள் அஞ்சி வாழந்தன. ஆனுல் அவ் அச்சமே பின்னர் மனிதனே, அப்பகலவனே வழிபடச் செய்தது. ஆதவன் அளித்திடட அவ்வெப்பமே, ஒளியுமே அவன் வாழவும, அதற்கு உதவிப புரிந்திட்ட தாவர இனம் உயிர் வாழவும் உதவி புரிகின்றன எனபதை, தனக்கே உரிய சிந்தனே உணர்வால், மனிதன் கண்டு தெளிந்தான். இரவில் வேட்டையாடி விலங்கோடு விலங்காக வாழ்ந்த அவன் சூர்யனின் உதவியால் பகலில் வேட்டையாடி இரவில் உறங்கிடும் வாழ்க்கையில அமைதி கண்டான். பின்னர் சூர்யன் தந்திட்ட பருவ மாறுபாடுகளேக் கண்டு வியந்திட்ட அவனது அறிவு வேளாண்மையின அவசியத்தை உணரச் செய்தது. இதுவே மனித நாகரிகததிற்கு அடிகோலியது. ஆன்மீக உணர்வு மலர்ந்திட வித்திட்டது.

அன்றைய மனிதனின இவ்ஆன்மீக வளர்ச்சிக்கு உரமிட்டது சூரிய வழிபாடேயாகும். இவ்வழிபாடு இந்திய மண்ணுக்கே உரியதாகாமல், மெஸபொடெமியா, எகிப்து, கிரேக்கம், மெக்ஸிகோ எனும் அயல்நாடுகளின மூத்த நாகரிக வாழ்க்கையிலும் முக்கியத்துவம் பெற்றது என்பது உலக வரலாறு கூறும் செய்தியாகும். சுமார் கி. மு. 30-ஆம் நூற்றுண்டிலேயே பிரமிடுகள் எனும் சூர்யனுர் கோயில்கள் கட்டப்பட்டதும, அங்கு நரபலி கொடுக்கப்பட்டதும் இவ்வழிபாட்டின் தொன்மையைக் குறிக்கும். புதுமைகள் கொண்ட 'மாயா' நாகரிகத்திலும் இச்சூர்யனுர் வழிபாடு மேறகொள்ளப்பட்டது இவ்வழிபாட்டின் பெருமையைக்குறிக்கும். சூர்யனேத்தந்தையாகவும், பூமியைத்தாயாகவும் போற்றி, அம்மண்ணில் வாழும் தம்மை அதன் படைப்புகளாகக் கருதி, அவைகளால வளர்க்கப்பட்டு, இறுதியில் உடலே மண்ணுக்கும், ஆத்மா எனும் உள்ளத்தை விண்ணுக்கும ஒப்படைக்கவே செய்தான. ஆம் பிறப்பும் இறபபும் சூர்யனின் சக்தியால்தான் என்றுணர்ந்தான். அச்சக்திக்கே தன் வாழ்க்கையில் முதலிடம் தந்திட்டான், முதல் வழிபாடு புரிந்திட்டான்.

இவ்வளவுச் சிறப்புக்கும் உரியவனுன அவ்ஒற்றைத் திகிரியானுக்கு ஏன் இந்தப் புண்ணிய பூமியில் விரல் விட்டு எண்ணும் அளவுக்கு சில கோயில்கள் மட்டுமே எழுப்பினுன் எனபது வியப்பூட்டும் ஒரு கேள்விக் குறியாகும். பின்னர் எழுந்த இந்து சமயக் கடவுளர்களுக்கு மட்டும வானளாவும கோயிலகளேக் குறிப்பாகத் தென்னுட்டில் கட்டி வைத்தனர். மேலும் சூர்யனுர்க்கு எழுபபப்பட்ட அச்சில கோயிலகளிலும, ஓிரண்டு கோயிலகள வழிபாட்டிற்காக முககியத்துவம் பெற்றுலும், மற்றவை அக்கோயிலகளின சிறப வேலேபபாடுகளுக்கே முதனமைப பெற்றுள்ளன என்பதை எண்ணிப் பார்த்திடின், வியப்புதான மீண்டும் மிஞ்சுகிறது. ஆதியிலிருந்து ஆதவனுக்கும மானிடனுக்கும உள்ள உறவே இந்நிலேயினேத தோற்றுவித்திருக்க வேண்டும் என்பதே இவ்வியப்புக்கு விடையாக அமையும. 'ஆம்' உறவுகள நெருங்கிடும்போது உள்ளங்கள ஒருங்கிணேந்திடுமபோது உருவங்களுக்கு அங்கு மதிப்பிலலே. ஒரு குடும்பததில் தாய் மகன் ஒன்றுக வாழ்ந்திடுமபோது, நாளதோறும் மகனே தாய் வாழ்ததலும், மகன் தாயை வணங்கலும நடைமுறையில பொதுவாக நடைபெறுவதிலலே. எனினும அவர்களுக்கிடையே உள்ள உறவின வலிமைக்கு ஈடு இணே ஏதுமில்லே. இந்தக் கணணேட்டத்தில்தான் பகலவனுக்கும் மனிதனுக்கும் உளள இணேப்பினே, உறவினேக் கண்டிடல் வேண்டும்.

அர்ச்சையில் ஆழங்கால்பட்ட மனிதன் அவ்அர்ச்சை நிலேயினேயும் பொது இடங்களிலேயே கணடு, வணங்கி மகிழ்ந்திடவே விரும்புகின்ற நிலேயில், ஆக்கல், அளித்தல், அழித்தல் நாயகனுக விளஙகி, ஆஸ்திகர்களாலும நாஸதிகர்களாலும் ஒரு சேர வணங்கப் பெற்று, உலகப் பொது சமயத் தலேவனுக விளங்கிடும் அப்பகலவனே நாள் தவருமல், காலங் கடக்காமல் நம்மைத் தேடிவரும்போது, நமது உள்ளமே அவனுக்குக் கோயிலாகிறது. இரு கை கூப்பி அவனேக் காண்டலே சிறந்த வழிபாடாகமைகினறது. ஆதவன் வழங்கிடும் வெப்பம நம ஆனமக் கதவுகளேத் திறந்து, நம அறிவில் தன் ஞான ஒளியினே வீசிடுமபோது, உண்மையிலேயே ஆதவனுல நாம் ஆட்கொளளப்படும் அதிசயம் நிகழவே செய்கின்றது. ஊனக் கண்களால் அவனேக் கண்டிடச் செய்து, நம் ஞானக் கண்களேத் திறந்திட வழிவகுக்கும் அவன அருமைதனே நினேந்து அவனடிப் போற்றி, நம் பிறவிக்குப் பெருமை சேர்ப்போமாக!

# செய்திச் சுருக்கம்

15-1-90 அன்று திருமலைக் கோயிலில் பாரி வேட்டை எனும் கோயிற திருவிழா வெகுச் சிறப்பாக நடைபெற்றது. பாரிவேட்டை மண்டபத்தில் உத்சவர்க்கு சிறப்பு வழிபாடுகள் மேற்கொள்ளப்பட்டன. தொடர்நது தி.தி.தே. அனனமாச்சார்யா திட்டக் குழுவைச் சேர்ந்த இசைக் கலைஞர்களால் இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது. திருமலை உதவி செயலாட்சித் தலைவர் தி. தி. தே. தோட்டததுறைக் கண்காணிப்பாளர் திரு. தம்மண்ணா, ஆநதிர மாநில சட்டமன்ற உறுப்பினர் திரு. பாப்பி ராஜு ஆகியோர் இச்சிறப்பு நிகழ்ச்சியினபோது உடன் இருந்தனர்.

15-1-90 அன்று திருமலைக்கு மத்திய சட்டத்துறை அமைச்சர் திரு. தினேஷ் கோஸ்வாமி அவர்கள் வருகை புரிந்தார்.

11-1-90 முதல் 13-1-90 வரை மூன்று நாட்களின்போது திருமலை மற்றும் திருப்பதியில நடைபெற்ற பல்வேறு சமயம் மற்றும் சமூக நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் வகையில் ஆந்திர முதல்வர் திரு. எம். சென்னா ரெட்டி அவர்கள், இரண்டாவது முறையாக முதல்வர் பதவி ஏற்றபின், முதல் தடவையாக திருமலைக்கு வருகை புரிந்தார். திருமலைக் கோயிலில் தக்க கோயில் மரியாதைகளுடன், ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. மாகன்ட்டி ரவீந்தர நாத் சௌத்ரி, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் மற்றும பல உயர் தேவஸ்தான அலுவலர்களால் வரவேற்கப்பட்டார். 12-1-90 அன்று திருமலைக் கோயிலில் நடைபெற்ற 'அபிஷேக' சிறப்பு நிகழ்ச்சியினைக் கண்டுகளித்தார். பின்னர் திருமலையில் சில குடில்களின்மீது கட்டப்பட்ட முதல்தள தங்கு அறைகளைத் திறந்து வைத்தார். பிறகு பாதாள கழிவுநீர்த திட்டம் ஒன்றிற்கு அடிக்கல் நாட்டினார். திருமலையில் தி. தி. தே. சமய நூல் மற்றும் ஒலிப்பேழை காட்சி அரங்கு ஒன்றினைப் பார்வையிட்டார். திருப்பதியில் சுமார் ரூ. 1.17 கோடி செலவில் கட்டப்படவிருக்கும் தி. தி. தே. ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலையரங்கு ஒன்றிற்கு அடிக்கல் நாட்டினார்.

12-1-90 அன்று திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயிலுக்கு வருகை புரிந்தார். பின்னர் அன்று காலை திருப்பதியில் உளள தி. தி. தே. நிருவாகக் கட்டிட வளாகத்தில் நடைபெற்ற தேவஸ்தான ஊழியர் கூட்டத்தில் பங்கேற்று உரையாறறினார். இக்கூட்டத்திற்கு ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. ஆர். செங்கா ரெட்டி, திருப்பதி தொகுதி பாராளுமன்ற உறுப்பினர் திரு. எம். ராமி ரெட்டி, மற்றும் ஆந்திர மாநில சட்டமன்ற உறுப்பினர்கள் திருமதி. ஜி. அருணா, திரு. பாப்பி ரெட்டி ஆகியோர் பங்கேற்றனர். எஸ். வி. கலைக்கல்லூரி விரிவுரையாளர் திரு. நரசிம்மா ரெட்டி அவர்கள் ஊழியர்களை வரவேற்க தி. தி. தே. ஊழியர் சங்கத் தலைவர் திரு ஏ. செங்கா ரெட்டி சார்பில் திரு காமி செட்டி ஸ்ரீநிவாசலு செட்டி அவர்கள் திரு. எம். சென்னா ரெட்டி அவர்களைப் பாராட்டும் வகையில் 'கவிதையில் பாராட்டுப்பத்திரம்' ஒன்றினை வாசித்தார். பின்னர் முதல்வர் அவர்கள் தம் சிறப்புரையில் தி. தி. தே. ஊழியர்கள் தங்கள் கடமை தவறாது, நேர்மையாக பணிபுரிவதே திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களுக்கு புரிந்திடும் ஒரு மகத்தான சேவையாக அமையும் என்று கூறினார். பின்னர் தி. தி. தே. மக்கள் தொடர்பு அலுவலர் திரு ஆர். சூர்ய நாராயண மூர்த்தி அவர்கள் நன்றி நவின்றார்.

இவ்வாண்டின் முதல் நாளான 1-1-90 அன்று திருமலைக்கு சுமார் 85,000 யாத்திரிகர்கள் வருகை புரிந்தனர். இதுபோது திருமலைக் கோயிலின் வருமானம் சுமார் ரூ. 54.6 இலட்சமாகும். ★

## சந்தாதாரர்களுக்கு...

31-3-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எணகளைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

4 6 33 40 71 91 93 95 101 128 172 174 184 187 293 296 298 372 376 385 390 436 458 479 501 741 956-A 1030 1110 1148 1215 1216 1296 1356 1381 1398 1404 1427 1428 1457 2224 2648 2661 2662 2665 2674 2677 2681 2686 2693 2698 2699 2705 2719 2721 2726 முதல் 2728 2734 2737 2738 2744 2749 2750 2756 2760 2770 2781 முதல் 2783 2787 2789 2793 2798 2802 2805 2810 2817 2828 2831 2833 2836 2838 2962 3911 3929 3935 3936 3940 3943 3947 முதல் 3950 3952 முதல் 3954 3959 3962 3968 3869 3982 3983 3989 முதல 3993 3997 4000 முதல் 4002 4007 4009 4013 4014 4016 4018 4028 4033 4043 முதல 4045 4048 4050 4055 4058 4061 4070 4071 4075 4083 4084–4088 4091 4338 4481 5386 5387 முதல் 5406 5408 5410 5411 5416 முதல் 5423 5425 முதல் 5431 5433 5136 முதல் 5445 5447 முதல் 5452 5454 முதல் 5459 5461 முதல் 5464 5471 5472 5480 5484 5573 முதல் 5577 5578 5611

# அந்நிலையும் அவ்வண்ணமும்



எல்லாமாய்ப் பரந்து எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் இறைவன். எல்லாவற்றையும் கடந்து நிற்பதால் கடவுள் என்றும், எல்லாவற்றுக்கும் இறுதியில் இருப்பதால் இறைவன் என்றும் அவன் அழைக்கப்படுகிறான். எல்லாவற்றிலும் பரந்து நிற்பதால் அவன் இல்லாத பொருள்களே இல்லை.

**'ஒன்றும் நீ அல்லை அன்றி ஒன்றில்லை**
**யார் உன்னை அறியகிற்பாரே'**

என்பது மணிவாசகம்.

**'ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும்**
**அல்ல புறத்தினுள்ளும்**
**நீக்கமின்றி எங்கும் நின்றாய்! (4-7-6)**

என்பது திருவாய்மொழி. வெளியிலும் அவன் எல்லாவற்றையும் கடந்து நிற்கிறான், உள்ளிலும் அனைத்தையும் கடந்து நிற்கிறான். இதனைக் கடப்பு நிலைத்தன்மை (transcendance) என்பர். எங்கும் பரந்த நிலையை நீக்கமற நிறைதல் (immanance) என்பர். இவ்விரு நிலைகளும் பொருந்திநிற்பதால் அவன், பரம்பொருள் என்றழைக்கப்படுகிறான்.

**வைணவத்தில :**

இதனை மனதில் வைத்துக் கொண்டே வைணவம் அவனுக்கு 5 நிலைகளை வகுத்தது. பரத்துவம், வியூகம், விபவம், அர்ச்சாவதாரம், அந்தர்யாமி என்பன அந்த 5 நிலைகள். எல்லாவற்றுக்கும் மேலானது பரத்துவம், 'மிக உயர்ந்தது' என்பது அச்சொல்லுக்குப் பொருள். 'உயர்வற உயர்நலம்' என்று நம்மாழ்வார் இந்நிலையைக் குறிக்கிறார். நித்திய சூரிகள் கண் இமைக்காமல் எம்பெருமானைக் கண்ணாரக் கண்டு அனுபவிக்கும் நிலை இது. 'அயர்வறும் அமரர்கள் அதிபதி' என்ற தொடரில் 'அமரர்கள்' என்பது நித்திய சூரிகளையே குறிக்கும்.

பரம்பொருளின் இரண்டாவது நிலை வியூகம் எனப்படும். பாற்கடலில் ஆதிசேடன் குடைபிடிக்க, திருமகள் கால் பிடிக்க எம்பெருமான் பாம்புப் படுக்கையில் சயனித்திருக்கும் கோலம் அது; 'உறங்குவான்போல் யோகம்' செய்கிறான் பெருமான். அந்நிலையில் அவனது நாபியிலிருந்து முளைத்திருக்கும் கமலத்தில் பிரம்மா அமர்ந்திருக்கிறார்.

விபவம் என்பது இறைவனது மூன்றாம் நிலை. உலகத்தின் நலனுக்காக இறைவன் மனிதச் சட்டை தாங்கி நிற்கும் கோலம் இது. அவதாரம் என்றும் இந்நிலையைக் கூறுவர். நம் பொருட்டு மேலிருந்து இறங்கி வரும் அவன் கருணையைக் காட்டுகிறது இது. அவதாரங்களை மூன்று வகையாகப் பிரிப்பர். ஆவேச அவதாரம், அம்ச அவதாரம், பூர்ண அவதாரம் என்பவை அவை. குறுகிய காலத்தில் தன் பணியை முடிக்க உண்டாவது ஆவேச அவதாரம். நரசிம்ம அவ

டாக்டர். தி. நா. பிரணதார்த்தி ஹரன்,
மதுரை

தாரம் இத்தகையது. இறைவனது அம்சம் இப்புவியில் மனிதனாய்ப் பிறந்து அவதார நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வது அம்ச அவதாரம். பரசுராமர், பலராமர் போன்றோர் இவ்வகையில் அடங்குவர். இறைவன் தன்னைத்தானே முழுதும் மனித உருவில் படைத்துக் கொள்ளுவது பூரண அவதாரம். கிருஷ்ணர், ஸ்ரீராமர் பூர்ண அவதாரம் ஆவர். இவ்வாறு மனிதர் துயர்நீக்க மனிதனாகவே இறைவன் மேலிருந்து கீழிறங்கி வருவது அவனது சௌலப்பியத்தைக் (எளிமை) காட்டுகிறது. அவதாரத்தில் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து காட்டுகிறான் பரமன். அநீதி அதிகமாகும் போதும், நீதி குறையும்போதும் அவதரித்து அறத்தை நிலைநாட்டுவது அவதார நோக்கமாக அமைகிறது. நல்லவர்

களைக் காதது, தீயவாகளை அழித்து, தருமம் தழைக்கச செய்வது அவ தாரத்தின பயனாகிறது.

அர்ச்சாவதாரம் என்பது நான் காவது நிலை. திருககோயில்களில் காணப்பெறும் இறைவன் திருமேனி களை அர்ச்சாவதாரம் என்பர். இறை வன் திருமேனியை இறைவனாகவே எண்ணி வழிபடுதல் வைணவத்தின் சிறப்பியல்புகளில் ஒன்று. நின்ற திருக்கோலம், உட்கார்ந்த திருக் கோலம், கிடந்த திருக்கோலம் என மூன்று வகைத் திருக்கோலங்களைச் சிறப்பித்துச் சொல்வர். நின்ற திருக் கோலம் திருவேங்கடத்திலும், உட் கார்ந்த திருக்கோலம் ஸ்ரீவைகுண்டத் திலும், கிடந்த திருக்கோலம் திரு வரஙகத்திலும் காணப்படுதல் மகிழ் வுக்கு உரியது.

அந்தர்யாமித்வம் என்பது ஐந்தா வது நிலை. இறைவன் இதய கமலத் தில் விளங்கித் தோன்றுதலைக் குறிப் பது இது. 'மலர்மிசை ஏகினான்' எனறு திருவளளுவா குறிப்பதும் இதனையே. இத்தொடருக்குப் பரி மேலழகர், "அன்பால் நினைவாரது உள்ளக கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின், 'ஏகினான்' என சிறநத காலத்தாற் கூறினார்", என்று எழுதுவார். இதய கமலத்தைத் தாமரையாகவே பேசும் உபநிடதம.

இவ்வாறு இறைவனுக்கு 5 நிலை களை ஏற்றி உரைக்கிறது வைணவம்.

**சைவத்தில :**

இறைவனை ஒளியாகவே கண்டு வழி படும் நெறி சைவ நெறியாம். 'பார் முதல் அண்டம் எங்குமாய்ப் பரந்த படரொளிப் பரப்பாய்' இறைவனைக் காண்கிறார் மணிவாசகர். இறைவனை 3 நிலைகளில் கண்டு வழிபடுகிறது சைவம். அவை ஒளி, சிவலோகம், சிறறம்பலம் எனபன. ஒளி எனபது எல்லாம் கடந்த நிலை; ஆதியும அந்த மும அற்றது. இதனையே சோதி, தேசு எனறும் அழைப்பர்.

சிவலோகம் என்பது இரண்டாவது நிலை. இங்கு சிவன் அவனது பரிவார தேவதைகளோடு வழிபடப்படுகிறான்.

'செடிசேர் உடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்'

என்பது திருவாசகம். வைணவத்தில் கூறப்படும் வியூகம் போன்றது சிவ லோகம். சிற்றம்பலம் என்பது இதய வெளி. வைணவம் இதனையே அந்தர் யாமித்துவம் எனறு பகர்கிறது. 'தேசன் சிவலோகன் தில்லைச் சிற்றம் பலத்துள் ஈசனார்' என்று பேசுகிறது திருவெம்பாவை.

இவ்வாறு இறைவனுக்கு 3 நிலை களை ஏற்றிப் பேசுகிறது சைவம.



**சாக்தத்தில் :**

அண்டமெங்கும் பரவிக் கிடக்கும் சக்தியைப் பரம்பொருளாக வழிபடு வது சாக்த சமயம். சக்தியை அன்னை யாகப் பேசுவது அதன் சிறப்பு. 'ஸ்ரீமாதா' என்று தொடங்கும் லலிதா ஸஹஸ்ர நாமம் 'அம்பிகா' (அன்னை) என்றே முடிகிறது. சைவத் தில் சிவனுக்குத் துணை போகிறாள் சக்தி. சாக்தத்தில் சக்திக்குத் துணை போகிறான் சிவன். இரு சமயங்களி லும் சக்தியும் சிவனும் சேர்நதே வழி படப்படுகின்றனர்.

சக்தன் அருள்தரின் சக்தி அருள
உண்டாம
சக்தி அருளதரின சக்தன் அருள
உண்டாம்

என்கிறது திருமந்திரம். சக்தியும் சிவனும் ஒரு நாணயத்தின இரு பக் கங்களாக அமைகின்றனா. சிவசக்தி ஐக்கிய ரூபத்தை வழிபடுகிறது சாக்தம்.

பரமபொருளை அழகு வடிவாகவும், மந்திர வடிவாகவும், குணடலினி வடி விலும் கணடு சிறப்பிககிறது அச் சமயம். இவற்றை முறையே ஸதூ லம், சூக்ஷ்மம், சூக்ஷ்மதரம் என்று

குறிப்பிடுவர். 'அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி' என்று அபிராமி பட்டர் கூறுவார் (மகா லாவண்ய சேவதி·) மநதிரங்கள் அ முதல் க்ஷ வரை 51 எழுத்துக்களால் ஏற் பட்டவை. எல்லா மந்திரங்களுக்கும் அவையே அடிப்படையாக அமை வதால் அவை 'தாய்' என்றும் 'விதது' என்றும் அழைக்கப்படுகின் றன. அன்னை அவற்றின் வடிவாகவே திகழ்வதால் 'மாத்ருகா வர்ண ரூபிணி' என்று அழைக்கப்படுகிறுள். மந்திரங்கள் பரம்பொருளின் ஒலி வடிவைக் குறிக்கும். மந்திரங்கள் சித்தியாகும் போதும் அதற்குரிய தேவதை அகக்கண்ணில் காட்சி தரும். இதனையே தெய்வக் காட்சி என் கிறேம். அது சூக்ஷ்மமானது. அதை விட நுண்ணியது குண்டலினி வடிவம்.

பரம்பொருள் தனது விருப்பத் தினுல் உலகைப் படைக்கிறது. பின் னர் அவ்வுலகினுள் தான் நுழை கிறது. அவ்வாறே உடம்பிலும் நுழை கிறது. உலகம் அண்டம் என்றும, உடல் பிண்டம் என்றும் அழைக்கப் படும. அணடத்தில் நிகழ்வதே பிண் டத்திலும் நிகழ்கிறது. அண்டம் macrocosm என்றும், பிண்டம் microcosm என்றும் வழங்கப்படு கிறது.

உடம்பில் குண்டலினி வடிவில் விளங்கும் சக்தி சுழுமுனை என்ற நாடியின் அடிப்பகுதியில் பாம்பு போல் சுருண்டு கிடக்கும். குண்ட லினி என்ற சொல்லிற்கே 'வளைந்து கிடப்பது' என்பது பொருள். மூச்சுக் காற்றை அந்த நாடியில் செலுத்தி, உறங்கிக் கொண்டிருக்கும் அச் சக்தியை விழிப்படையச் செய்தல வேணடும். அது மேல்நோக்கிக் கிளம் பும். ஆறு ஆதாரங்கள வழியே (புருவ நடுவைக கடந்து) தலையில் இருககும் ஸஹஸரதளம எனனும் தாமரையில் பரமசிவத்துடன் ஐக்கிய மாகும். அப்போது அமுதம் உண் டாகும். அதைப் பருகி ஆனந்தத்தில் திளைக்கலாம். இவ்வாறு சிவசக்தி ஐக்கியம சிறப்புப் பெறுகிறது.

இப்படி 3 நிலைகளில் பரம்பொரு ளைக் காணகிறது சாக்தம்.



**காணபத்தியத்தில் :**

காணபத்திய மதம் கணபதியே முழு முதற்பொருள் என்கிறது. அவருக்குள் மற்ற எல்லாம் அடக்கம். கணபதிக்கு 5 வடிவங்களைக் காட்டு கிறுர் வியாசர். பிரம்ம மயம், பிரம் மாண்டம், யானை முகம், மூலாதர நிலை, இதய கமலத்தில் இருத்தல என்பன அவை.

உருவமும், பெயரும் அறற நிலை பிரம்ம மயம். நம் அறிவைத் தூண்டு பவராக அவர் விளங்குகிறுர். மனம், வாக்கு கடந்த நிலை அது. பிரம்மாண் டம் என்பது ஓம்காரமாக அவர் விளங்குகிறுர் எனபதைக குறிக்கிறது. அ, உ, ம, நாதம், பிந்து என்று ஐந தாக ஓம்காரத்தைப்பகுப்பர். ஐந் திலும் கணேசா ஒளி விடுகிறுர். யானை முகம் என்பது உருவமுள்ள நிலை. சகுண நிலை என்று இதனை வழங்குவர். வழிபடுவோர்க்குக் காட்சிப்படும் நிலை இது. மூலாதார நிலை எனபது யோக வழிபாட்டில் ஆதார நிலையைக குறிக்கிறது. இதய கமலத்தில் அவரே ஆத்மா. ஞானத் தைக் குறிககிறது. ஆகவே பகதி, யோகம், ஞானம் என மூன்று நெறி களிலும் கணபதி வழிபாடு அமை கிறது என்பதை உணரலாம்.

இவ்வாறு 5 நிலைகளில் இறை வனைக் காண்கிறது காணுபத்தியம்.

**கௌமாரத்தில்**

முருகனே பரம்பொருள் என்று வலியுறுத்துகிறது கௌமாரம். முரு கனுக்கு ஒளி, ஆறுமுகக் கோலம், இதய குகையில இருத்தல், பிரணவ நிலை என 4 நிலைகளைக் காட்டுகிறது கௌமாரம.

ஒளி அல்லது சோதியே முருகன். அது அவனது மிக உயர்ந்த நிலை. ஆறு சோதிகளின் சேர்க்கை தானே அவன்! 'பிரம்மமாய் நின்ற சோதிப் பிழமபு' என்கிறுர் கச்சியப்பர். 'கருணை கூர்முகஙகள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு' விளங்கு வது ஆறுமுகத் திருககோலம். இந் நிலையில் இறைவனுககு உருவம் உணடு. இதய குகையில் அவன் (சிற் றம்பலததில்) காட்சிப்படுவதால் குகன் என்றே அழைக்கப்படுகிறுன். ஓம்காரம் (பிரணவம் என்பது இறை வனுக்கு ஒரு குறியீடு. அது அவனது ஒலி நிலையைக் குறிக்கிறது.

இவ்வாறு 4 நிலைகளை இறைவனாக சூரியதாகப் பேசுகிறது கௌமாரம்

சௌரத்தில :

சூரியனே பரமபொருள் என்று சிறப்பிக்கிறது சௌரம். சூரிய வழிபாடு வேத காலத்திலிருந்தே வழக்கில் இருக்கும் ஒன்று ஆதித்யன் என்ற பெயர் வேதத்தில் அவருக்கு வழங்கப்பட்டது. சோதி, சுடர், செம்மை நிற வடிவம் என மூன்று நிலைகளில் சூரிய வழிபாடு அமைகிறது. சோதி என்பது ஒளியைக் குறிக்கும். சுடர் என்பது வடிவத்தோடு கூடிய ஒளியைக் குறிக்கும். செம்மை நிற வடிவம் பிரமன், திருமால், சிவன் ஆகியோர் அம்சத்தைக் கொண்டது. சவிதா என்பது சூரியனுக்குரிய பெயர். காயத்ரீ மந்திரம் சூரியனுக்கே உரியது. 'ஸவிதுர் வரேண்யம்' என்ற தொடர் இதனை உணர்த்தும். ஆகவே ஸாவித்திரி என்பதே அந்த மந்திரத்திற்குரிய பெயர். காயத்திரி என்பது யாப்பின் அடிப்படையில் அமைந்தது. நம் அறிவைத் தூண்டும் ஒளியாகச் சூரியன் வழிபடப்படுகிறது. ஸௌர்ய மண்டலத்தின் நடுவில் நாராயணரைத் தியானிப்பது வழக்கம். 'ஸவித்ரு மண்டல மத்ய வர்த்தீ நாராயண.' என்கிறது சுலோகம் ஒன்று. சூரியனும் நாராயணரும் சேர்த்தே வழிபடப்படுவதால் 'சூரிய நாராயணர்' என்ற பெயர் ஏற்பட்டது.



திருக்கடையூர் அபிராமி அம்மன் சன்னிதி

வேதத்தில் சிறப்பிக்கப்படும் சூரிய வழிபாடு பின்னர் விஷ்ணு வழிபாடாகவும், அக்னி வழிபாடு சிவ வழிபாடாகவும் மாறியது என்று கூறுவர்.

இவ்வாறு இறைவனுக்கு 3 நிலைகளைச் சுட்டுகிறது சௌரம்.



பழனி திருக்கோயில்

முடிவு :

ஆறு மதங்களிலும் இறை நிலை எவ்வாறு அமைகிறது என்பது இது காறும் விளக்கப்பட்டது. இவை எல்லாவற்றையும் நோக்கும்போது பின்வருமாறு இறைவனது நிலைகளைப் பொதுமைப்படுத்தலாம்.

1. எல்லாம் கடந்த நிலை (விசுவாதிகம்)

2. எங்கும் நிறைந்த நிலை (விசுவாகாரம்)

3. உருவத்தோடு கூடிய நிலை (சகுண நிலை)

4. உள்நிலை (அந்தர்யாமித்துவம்)

5. ஒலி நிலை (மந்திர வடிவம்)

6. ஒளி நிலை (தேஜோ மயம்)

இவ்வாறு 6 நிலைகளில் இறைக் கோட்பாட்டை விளக்குகிறது இந்து சமயம்.



# ஆதிரைத் திருநாளும் மஹா வியதீபாதமும்

மார்கழி மாதத்திற்குப் பெருமை தருவது திருமாலைப் போற்றும் பாவை நோன்பாகும். மேலும் இம் மாதத்தில் வரும் ஆதிரைத் திரு நாளும்,மஹாவியதீபாதமும் இதற்கு மேலும் பெருமை சேர்க்கிறது. மார் கழி மாதம் பௌர்ணமியும் திரு வாதிரை நட்சத்திரமும் கூடி வரும் தினம் ஆதிரைத் திருநாள் ஆகும். வியதீபாதம் என்பது இருபத்தேழு வகை யோகங்களில் ஒன்று. நட்சத் திரங்கள் இருபத்தேழு இருப்பது போல யோகங்களும் இருபத்தேழு உண்டு. இந்த எல்லா யோகங்களும் ஒவ்வொரு மாதமும் ஏற்படும். ஆனால் இந்த யோகங்களில் ஒன்றான வியதீபாதம் மார்கழி மாதத்தில் ஏற்படும்போது இதற்கு "மஹாவியதீ பாதம்" என்று பெயர். ஆனால் நாள் தோறும் ஏற்படும் சித்த, அமிர்த, மரண யோகங்கள் இந்த இருபத் தேழு யோகங்களில் சேராது.

ஒவ்வொரு நட்சத்திரத்துக்கும், ஒவ் வொரு யோகத்திற்கும் தனித்தனி தேவதைகளும் தனித்தனி அதி தேவதைகளும் உண்டு. இவ்விதம் வேதத்தில் நான்காம காண்டம், ப்ர சனம் நான்கில், அனுவாகம் பத்தில் திருவாதிரை நட்சததிரத்திற்கு சிவ பிரானே அதிதேவதை என்று கூறப் படுகிறது. ஜோதிஷ ரத்னாகரததில் நாரத பகவானால் வியதீபாதயோகத் திற்கும் அதிதேவதை சிவபெருமானே என்று கூறப்படுகிறது. எனவே இவ் விரு சுபதினங்களும் அளவற்ற பெருமை உடையதாகும்.

ஆதிரைத் திருநாளின் பெருமை பற்றி தேவாரப் பதிகங்கள் பல புகழ்ந்து கூறுகின்றன. தவிரவும் திரு வாதிரை நட்சத்திரத்தின வரலாறு பற்றி புஷ்பதந்தர்என்ற காஷ்மீரைச் சேர்ந்த வடமொழிக் கவிஞர் ஒருவர் தனது "சிவ மஹிம்ன ஸ்தோத்ரம்" என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

அதாவது ஒரு சமயம் ப்ரும்ம தேவர் ஸந்தி என்ற அழகிய பெண்ணைப் படைத்தார். தான் படைத்தஅப்பெண்ணைத்தன்னைத்திரு மணம் செய்து கொள்ள வேண்டினார். ஆனால் அப்பெண் ப்ரும்மாவை தனக்கு தந்தைக்குச் சமம் என்று கூறிமறுத்துவிட்டாள். ப்ரும்மா வற் புறுத்தவே ஸந்தி பெண்மான் உருக் கொண்டு ஓடினாள். நான்முகனும் ஆண்மான் வடிவத்தில் பின்தொடர்ந் தார். தன்னை விரும்பாத பெண்ணை ப்ரும்மா வற்புறுத்திப் பின் தொடர்வதை கண்ட சிவபெருமான் ப்ரும்மதேவருக்கு ஒரு பாடம் புகட்ட எண்ணினார். உடனே தனது பிணாகம் என்ற வில்லை எடுத்துக்கொண்டு அதில் அம்பைப் பொருத்தியவாறு சிவபெருமான் நான்முகனுக்குப் பின் புறம் சென்று நின்றார். எதிர்பாராத இறைவனது இச்செயலால் ப்ரும்மா வெட்கமும் அச்சமும கொண்டு மிருக சீரிஷ நட்சத்திரமாக மாறினார். ஈச னும் தனது அம்பினைத் திருவாதிரை நட்சத்திரமாக மாற்றினார். உடனே ப்ரும்மா தனது செயலுக்கு சிவபெரு மானிடம் மன்னிப்புக்கோரினார் என்ற இவ்வரலாற்றையே புஷ்பதந்தர் அழ கிய ச்லோகமாக இயற்றி உள்ளார். இதனால்தான் இவ்விரு நட்சத்திரங் களும் வானவீதியில் ஒரு அம்புபோல காட்சி அளிக்கிறதுபோலும்!

பொதுவாக ஒவ்வொரு புண்ய தினத்தை ஒட்டி ஒவ்வொரு க்ஷேத் திரத்தில் ப்ரும்மோத்ஸவம் செய் வார்கள். இவ்விதம் திருவாதிரையை ஒட்டி சிதம்பர க்ஷேத்திரத்தில் ப்ரும் மோத்ஸவம் செய்கிறார்கள். திருவா வடுதுறைக்கு 1 மைல் தெற்கே உள்ள திருக்கோழம்பம் என்ற தலத்தில் மஹாவியதீபாதத்தை ஒட்டி ப்ரும் மோத்ஸவம் நடந்து வருகிறது.

*திரு. பி. ரவீந்திரன்,*
*திப்பிராஜபுரம்*

தில்லையில் எழுந்தருளி இருக்கும் நடராஜப்பெருமானின் தத்துவத் தைப்பற்றிச் சிதம்பர மாஹாத்மியம், உமாபதி சிவாசாரியார் என்பவரது குஞ்சிதாங்கிரிஸ்தவம், மகுடாகமம், திருமூலரின் திருமந்திரம் ஆகியவை அரிய விளக்கம் கொடுக்கின்றன. ஸ்காந்த புராணம் சங்கரஸம்ஹிதை சிவரஹஸ்ய காணடமும், தக்ஷ காண்டமும் சிவதாண்டவத்தின் பெருமைபற்றிப் பேசுகின்றன. சிதம் பர மாஹாத்மியத்தில் இறைவனின் உடுக்கையில் இருந்து பதினான்கு ஒலி கள் உண்டாகி அதில் இருந்தே பாணினி முனிவர் அஷ்டாதயாயீ என்ற வியாகரண நூலை இயற்றிய தாகக்கூறப்படுகிறது. இப்பெருமா னது திருவருள் பெற்ற பதஞ்ஜலி முனிவர் இயற்றிய சிதம்பரேச ஸ்தவம், ஹாவாஸ்ய சிவதாணடவம் என்ற ஸ்துதிகளும், ராவணனால் இயற்றப்பட்ட "ராவண சிவதாண் டவம்" என்ற கிரந்தமும், இறைவ னின் திரு நடனத்தை வெகு அழகாக வர்ணிக்கின்றன.

# அண்ணுமலையாருக்கு அரோகரா!

திரு அறையணிநல்லூர் என்னும பாடல் பெறற சிவத்தலம் இனறு அரகண்டநல்லூர் எனற பெயருடன விளங்குகிறது. திருக்கோவலூா பெணணையாற்றங்கரையில் வடபுறம் இது அமைந்துள்ளது திருவண்ணு மலை இங்கு இருந்து 37 கி.மீ. தொலைவில் உள்ளது. திரு அறையணிநாதர் ஒரு குன்றின்மீது இங்குக் கோயில் கொணடுள்ளார். திருஞான சம்பந்தர் தம் திருத்தல யாத்திரையினபோது இக்கோயிலுக்கு வருகைதந்து இறை வனைப் பாடி பரவியுள்ளார். வழிபாட்டினை முடித்துக் கொணடு வெளி யில் புறப்படும்போது உடன இருந்த கோயில் சிவாசாரியர் "இதோ திரு வணணுமலை தெரிகிறது காணுங்கள்" எனறு திசை காட்டி நின்றார். அவர் சுட்டும் திசையை திருஞான சம்பந்தர் ஆவலுடன் நோக்கினர். அஙகு திருவணணுமலை, சிவபெருமானின் திருவுருவமாகவே காட்சி அளித்தது. அக்காட்சியைக் கணடு அகம் கனிந்து அங்கேயே அவர் அணணுமலையார் மீது திருப்பதிகம் பாடத் தொடங்கினர். இப்புனித இடத்திலிருந்து நாம் இன்றும் திருவணணுமலையைக் கண்டு தொழுது மகிழ்ச்சி கொள்ள முடி கிறது. திருஞான சமபந்தர் திருவண்ணுமலை நோக்கி தல யாத்திரை யைத் தொடர்நதார். அவர் அருளிய அத்திருப்பதிகத்தின முதல் பாடல்:

**உண்ணுமுலை யுமையாளொடும் உடனுகிய ஒருவன**
**பெண்ணுகிய பெருமான்மலை திருமாமணி திகழ**
**மண்ணுர்ந்தன அருவித்திரள் மழலேம் முழவதிரும்**
**அண்ணுமலை தொழுவார் வினை வழுவாவண்ணமறுமே.**

**—ஆர் சுப்பராவ்-திருக்கோவலூர்.**

"கோயில்" என்ற சிறப்புப் பெயா தில்லைக்கும் திருவரங்கத்துக்கும மட்டுமே உண்டு. உபநிஷத்துக்களால் உணர்த்தப்பட்ட விராட் புருஷனின இதய மத்தியில் சிதமபர க்ஷேத்ரம அமைந்து இருப்பதாக "ஜாபால தர்சனம்" எனற உபநிஷதம கூறு கிறது. பஞ்சபூதஸ்தலஙகளில் இது ஆகாச தததுவத்தைக குறிக் கிறது. "சிதமபர ரகசியம்" என்று போற்றப்படும் இநத ஆகாச தத்து வத்தைப்பற்றி சாநதோகியம், பிருக தாரண்யம், கைவல்யம போன்ற உப நிடதங்கள் விளக்கமுயற்சிக்கினறன. உபாசனைகளில் குறிபபிடப்படும் ஆறு ஆதாரஸ்தானங்களில மூலாதாரத் தைக் குறிக்கும் தலம் திருவாரூர் என்றும், ஸவாதிஷ்டானத்துக்குரிய தலம் திருவானைக்காவல எனறும், மணிபூரகத்தைக் குறிப்பது திருவண ணுமலை என்றும், தில்லையம்பதியான சிதமபரத்தை அனுஹத க்ஷேத்ரமாக வும், விசுத்திககுரிய தலமாக காள ஹஸ்தியும், ஆக்ஞா க்ஷேத்ரமாக முக்தியைத் தரும் காசியும் கூறப் பட்டு உள்ளது. இத்தகைய பெருமை வாய்ந்த சிதம்பரேசனின் துணைவி யான அன்னை சிவகாம சுந்தரியை வாகசிற்கு அதிதேவதையான "மனேன்மணி" என்ற சகதி ரூபமாக சாஸ்தரங்கள் கூறுகின்றன.

சிதம்பரத் தலத்திற்கு கனகசபை அல்லது பொன்னம்பலம் என்ற பெயர். இதேபோல் ஹாலாஸ்ய க்ஷேத்ரம் என்று அழைக்கப்படும் மதுரையம்பதிக்கு ரஜதசபை அல்லது வெள்ளியம்பலம் எனறு ஒரு பெய ருணடு. திருவாலங்காடு என்ற தலத் துக்கு ரத்ன சபை என்றும், திருநெல் வேலி ஆலயத்திற்கு தாமிர சபை என்றும், புஷ்பங்கள் நிரமபி வழியும் திருக்குற்றாலத்திற்கு சித்ர சபை என்றும பெயா வழங்கி வருகிறது. இவையனைத்தும் கூத்தபிரானின் முக் கிய திருததலஙகளாகும. இவற்றைத் தவிர ராமாயண காவியத்தாலேயே போற்றப்பட்ட ஒரு தலம் "ஆதிசிதம் பரம்" எனப்படும் திருவெண்காடா கும். சீர்காழிக்கு அருகில் உள்ள இத்தலத்திலும நடராஜப் பெருமா னுக்குத் தனி நடன சபை உணடு. ஸ்படிகலிங்க பூஜையும், ஆகாச தத் துவ ரகசியமும் உள்ளன. ஒப்பற்ற அழகும் ஸானனித்தியமும் உள்ள இவரது பாதத்தில் பதினன்கு சதங் கைகள் உடைய காப்பு ஒனறு அணிந் துள்ளார். இது பதினன்கு உலகங் களும் இவரது பாத அசைவினுல் அசையும் எனபதைக் காட்டுகிறது. இவரது இடுப்பில் 81 சங்கிலி வளை யங்கள் இணைத்த அரைஞாண் அணிந் துள்ளார். இது ப்ரணவம் முதலாக நம: முடிய உள்ள 81 பத மந்திரங் களைக்குறிப்பிடுகிறது. இருபத்தெட்டு எண்ணிக்கை உடைய எலும்பு மணிக ளைக் கொண்ட ஆபரணம் ஒன்றினை இவர் அணிந்துள்ளார். இது இருபத் தெட்டு சதுர்யுகங்கள் முடிந்துவிட் டதைக் குறிப்பிடுகிறது. இவரதுமார் பில் ஒருபுறம் ஆமை ஓடும், ஒருபுறம் பன்றிக் கொம்பும்போல் அமைந்த பதக்கம் ஒன்றும் அணிநது உள் ளார். இது "எனபொடு கொம்பொடு ஆமை இவை மார்பிலங்க" என்ற கோளறு பதிகத்தை நினைவூட்டு கிறது. இவரது தலையில் ஷோடச கலைகளைக் குறிக்கும் பதினறு சடை கள் உள்ளன. மயிற்பீலியும அணிந் துள்ளார். மீன்போன்ற வடிவத்தில் கங்கையும் மற்றும் பிறைச் சந்திரனும் இவரது சிரசை அலங்கரிக்கின்றன. இறைவனது நடனத்தை அருகில் நின்று களிக்கும் அன்னை சிவகாமசுந் தரி "மஹேச்வர மஹாகல்ப மஹா தாணடவஸாக்ஷினீ" என்ற லலிதா

ஸஹஸ்ரநாம வரியை நமக்கு நினை வூட்டுகிறுர்.

இத்தகைய சிறப்புவாய்ந்த நடராஜப்பெருமாளின் பெருமையை விளக்கும் சிதம்பரமாஹாத்மியம் என்ற நூல் இறைவனது கரத்தில் உள்ள உடுக்கை படைத்தலேயும், அபயக்கரம் காத்தலேயும், ஒரு கரத்தில் உள்ள அக்னி அழித்தலேயும், தூக்கிய திருவடி அருளேயும், முயலகன் மீது வைத்து இருக்கும் பாதம் மறைத்தலேயும் ஆக ஐநதொழில்களேயும் இறைவன் தனது ஸங்கல்ப மாத்திரத்தில் நடத்துவதைக் குறிப்பிடுகிறது என்று கூறுகிறது. அமர கோசம் என்ற நூலும் இறைவனே "மஹாகாலோ மஹாநட:" எனப் புகழ்கிறது. எனவே இத்தகைய புண்ய தினமான திருவாதிரைத திருநாளில் நாமனேவரும் ஆடவல்லனுகிய சிவ பிரானேப் போற்றி பரவுதல் கிடைத்தற்கரிய பேருகும்.

அடுத்தபடியாக இம்மார்கழி மாதத்தில் பரமேசுவரனே மகிழ்விக்கும் மஹாவியதீபாத விரதத்தின் பெருமையைக் கவனிப்போம். ஸூத ஸம்ஹிதையில் தீர்த்த மாஹாத்மிய காண்டத்தில், இம்மஹாவியதீபாதம் வரும் நாளனறு தற்கால குஜராத்தில காடியாபாத் என்ற இடத்தில உள்ள ஜியோதிர்லிங்கமான ஸோமநாதரையோ, திருவாரூர் த்யாகேசனேயோ, ராமேசுவரத்தில் எழுந்தருளி உள்ள ராமநாதசுவாமியையோ தரிசித்து வழிபடுதல் மிகச சிறந்த பலனேத்தரும் என்று கூறப்படுகிறது.

சைவபூஷணம என்ற ஆகம நூலில வியதீபாத தினத்தன்று அதிகாலேயில் எழுந்து ஆசாரத்துடன் சிவபூஜை செய்வது மிகவும் உயர்நதது எனறு கூறுகிறது. இவவிதம் ஒரு வருடத்தில் வரும் பதிமூன்று வியதீபாதங்களும் செய்தால் ஸ்ரீ பரமேசுவரன எல்லாவித நன்மைகளேயும் அளிப்பார் என்று கூறுகிறது. இப்பூஜையை மார்கழி மாதம் மஹாவியதீபாதத்தில் தொடங்கி அடுத்த மஹாவியதீபாதத்தில் பூர்த்தி செய்ய வேண்டும். வியதீபாதமும் நட்சத்திரங்களேப் போலவே இருபத்தேழு நாட்களுக்கு ஒரு முறை வரக்கூடியது.

முன்னெரு சமயம் சந்திரன் குரு பத்தினியான தாரையிடம் தவருன எணணத்துடன் பழகமுற்பட்டபோது தர்மத்தில் அதிக ஈடுபாடுடைய சூரியன் சந்திரனேக் கோபத்துடன் கடிந்து உஷ்ணமாகப் பார்த்தார். தனது சொந்த விஷயத்தில் சூரியன தலேயிடுவதை விரும்பாத சந்திரனும் பதிலுக்கு சூரியனேச் சினந்து நோக்கினுன். அப்போது அவர்களுடைய கோபப்பார்வை ஒன்று கலநததால் அவாகளிடையே ஒரு திவ்ய புருஷன் தோன்றினுன். இவ்விதம ஏற்பட்ட தேவதையே வியதீபாதம் என்ற யோகத்திற்கு உரிய தேவதையாகும். இநத தேவதைக்கு அதிதேவதை சிவபிராஞவார். தவிர இம்மஹா வியதீபாதத்தன்று தத்த, தத்த என்று ஜபித்து தத்தாத்ரேயரை வழிபடுபவர்கட்கு தத்வஞானம்ஏற்படும் என்றுசாஸ்த்ரங்கள்கூறுகின்றன. இன்றைய தினம் முன்னேர்கட்குத் தர்ப்பணம் செய்வது சிறந்தது. ஒரே ஆண்டில் செயயப்படும் ஷணணவதி என்று கூறப்படும் 96 சிராத்தங்களில் இந்தப் பதிமூன்று வியதீபாதஙகளும் அடங்கும. அதிலும் மஹாவியதீபாத தினம் செய்யும பிதரு கார்யஙகள் கயா சிரார்த்தபலனேக் கொடுககும் என்பது உறுதி.

மேலும் தனுர்மாஸபுராணம் ஐந்து ஆறும் அத்யாயஙகளில் மஹாவியதீபாததைப்பறறி புகழ்நது கூறப்படுகிறது. இவ்விரு அத்யாயங்களும ஸ்ரீக்ருஷ்ணனுக்கும் ததிபாலன் என்ற யாதவனுக்குமாகவும், மார்க்கண்டேயருக்கும் யுதிஷ்டிரருககுமாகவும உரையாடல் வடிவில் உளளது. இப்புராணத்தில் மஹாவியதீபாத தினத்தன்று அதிகாலேயில் துளசியையும், விஷ்ணுவையும பூஜை செய்து பயற்றுப் பொங்கல் நிவேதனம் செய்வது சிறப்பித்துக் கூறப்படுகிறது.

அடுத்தபடியாக வியதீபாத விரதத்தை எப்படிச் செய்வது என்பதை மார்ககண்டேயர் உபதேசித்து உள்ளார். அதன்படி இந்த விரதத்தை மார்கழி மாதம் வரும் மஹாவியதீபாத தினத்தனறு தொடங்கி ஒரு ஆண்டில் வரும் பதின்மூன்று வியதீபாதங்களும் அனுஷ்டிக்க வேண்டும்.

விரத தினத்தனறு அதிகாலே நதிகள் அல்லது குளங்களிலோ நீராடி, காலே வந்தனங்களே முடித்தப் பிறகு நதிக்கரையில் எள் நிறைந்த ஒரு வெண்கலப் பாத்திரத்தை உண்மை அந்தணர் ஒருவர்கது தானம் செய்ய வேண்டும். பிறகு 15 கிராம் அல்லது 30 கிராம் எடையுள்ள ஒரு பிரதிமையைச் செய்ய வேண்டும். அப்பிரதிமை வரதமுத்திரை, அபயஹஸ்தத்துடன் இரண்டு கரங்களுடன் இருந்தாலே போதுமானது. இந்த பிரதிமையை வியதீபாத தேவதை ஆகும்.

இந்த வெண்கலச் சிலேயைக்காராம் பசுவின் பால் நிறைந்த கும்பத்தின் மீது வைத்து முறைப்படி பூஜிக்க வேணடும். சூர்ய சந்திரனுடைய அஷ்டோத்தரம் செய்யலாம். பிறகு நெய் கலந்து பயற்றுப் பொங்கல், வடை முதலியவற்றை நிவேதனம் செய்து கற்பூரம காட்டவேண்டும். பிறகு "வியதீபாதமஹாபாஹோ ஸர்வபாபப்ரணுசனு, ஸஹஸ்ர பாஹோ விச்வாத்மந் கருஹாணுர்க்யம் நமோஸ்துதே" என்று கூறி மூனறு முறை தீர்ததத்தால் அர்கியம்விடவேணடும். பிறகு வேத வித்துக்களேக் கொணடு 108 ஆவாத்தி எள்ளினுல் ஹோமம் செய்ய வேணடும. பிறகு ஒருசிலருக்காவது உணவளிக்க வேண்டும். பிறகு தனது குலகுருவுககு சக்திக்கு தககபடி தானம் செய்து நமஸகரிக்க வேணடும். அன்றைய தினம் இவ் விரதத்தை செய்பவர் எளிய ஆகாரங்களேயே உட்கொள்ள வேண்டும்.

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3 | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கண்ணன் பேசுகிருன் —நஜன் | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 11. | முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூலமாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செயலாட்சித் தலேவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

இவ்விதம் ஒவ்வொரு மாதமும் செய்து அடுத்த மார்கழி மாதம் மஹாவியதீபாத தினத்தன்று சர்க்கரை நிறைந்த குடத்தில் இப்பிரதமையை வைத்து வீட்டு மத்தியிலோ பசுமாட்டுக் கொட்டிலிலோ வைத்துப் பூஜிக்கவேண்டும். பிறகு அன்றும் வழக்கம் போல விரதத்தை செய்து தன் குலகுருவிடம தகுந்த தட்சிணேயுடன் இப்பிரதிமையைக் கொடுத்து வணங்க வேண்டும். குருவுக்கு இந்த பிம்பத்தைப் பெற விருப்பம் இல்லேயேல் நதிகள் கடலில் கலக்கும் இடத்தில் அல்லது முக்கடல் கூடும் சங்கமங்களில் போட்டுவிடலாம். விரதத்தைத்தொடர்ந்துசெய்யஇயன்ருலும் செய்யலாம். ஒரு ஆண்டு இதை செய்தவுடன் அவர்கட்கு சிவபெருமான் கோரிய வரங்களே அளித்து வருகிருர். இன்று தானம் செய்வது கோடி மடங்கு பலனேத் தரும்.

இந்த விரதத்தைக் கடைப்பிடித்த மஹிமையினுல் ஹர்யச்சிவன் என்ற அரசன் விச்வஸகா என்ற பெயர் உடைய ஒரு வியாபாரிக்கு அவனது பாபத்தைப் போக்கி முக்தி அளித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. இதேபோல் திருக்கோழம்பம் என்ற தலத்தில் சநதன் என்ற யக்ஷன் தனக்கு சாபத்தால் ஏற்பட்ட குயில் பிறவியைஇங்குள்ள மது தீர்த்தத்தில் நீராடி இவ்விரதத்தை செய்து இங்குள்ள இறைவனேப் பூசித்துப் போக்கிக் கொணடதாக இத்தல புராணம் கூறுகிறது.

எனவே நாமும் மார்கழியில் நீராடி ஆதிரை நோன்பும், மஹா வியதீபாத விரதத்தினேயும் அனுஷ்டித்து அறம், பொருள், இனபம், வீடு ஆகிய எல்லா வித வளங்களேயும் முக்கட் கடவுளின் திருவருளால் பெறுவோமாக.





2. மற்றொரு பொருள் யாதெனின் "ஆ" எனபது சிவஞானத்தையும், "க" எனபது மோட்சத்தையும, "ம" என்பது மும்மலத்தைஅழிப்பது என்ற பொருள்படுகிறது. இதனுல் ஆகமங்கள், ஆன்மாக்களுடன் (உயிர்) இருந்து வருகினற மும்மலமான ஆணவம், காமம், மாயா முதலியவறறை அழித்து சிவஞானத்தை புகுத்திட மோட்சத்தைக் கொடுக்க வந்தது என்று பொருள்படுகிறது.

இதனே திருமூலர் தம் திருமந்திரத்தில் "வேதமொ டாகமம் மெய்யாம் இறைவன் நூல" என்கிருர்.

2. கிரியாபாதம் மந்திரங்களின் உத்தாரம், சந்தியாவநதனம், பூஜை, ஜெபம், ஹோமம் (யாகம்) முதலிய வறறை விளககுகிறது.

3. யோகபாதம் : யம, நியம முதலாகிய பிரணுயாம யோக முறைகளேயும் யோகத்தின் வாயிலாக அடையப் பெறும் சித்திகளேயும் விளக்குகிறது.

4. ஞானபாதம்: ஆன்மாவின் முக்கிய நோக்கம் பதி, பசு, பாசம் என்னும் மூனறை உணர்ந்தும், நித்தியமில்லாத பசுஞானம், பாசஞானத்தை விட்டு பதி ஞானமே உயர்ந்தது என்று உணரும் தன்மையை விளக்குகிறது.

# சிவாகமங்கள்

சிவபெருமானின் அருளேயும் அவனேப் போற்றி வழிபடும் முறையினேயும் வேதங்கள் நான்கிலும் விளக்கப் படுகிறது. வேதம் என்ற சொல்லுக்கு "ஞானம்" அல்லது "அறிவு" என்று பொருள்படும். இவ்வேதங்களின் உட்கருத்தை நாம் உடன் உணரப் படாமையின் நிமித்தமாக சிவபெருமானுல் அருளப்பட்டது ஆகமம் ஆகும்.

மாணிக்கவாசகர் தன் திருவாக்கில் "ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க" என்கிருர். ஆகமத்தின் வழியாக இறைவனை சிவபெருமானே அடைவது முற்றிலும் சாலச் சிறந்தது என்கிருர்.

**ஆகமததின பொருள் :**

1. "ஆ" என்பது பாசம் என்றும், "க" என்பது பசு எனறும், "ம" எனபது பதி என்றும பொருள்படும். எனவே முப்பொருள் உணமையை உணர்த்த வந்தது ஆகும் எனறு நமக்குத் தெரிய வருகிறது.

---


திரு. எஸ. நாராயணஸவாமி,
திருவாவடுதுறை


---

இந்த ஆகமங்கள் சாக்த சமயத்தார்க்கும் வைணவசமயத்தார்க்கும், சைவ சமயத்தார்க்கும் தனித்தனியே அமைந்துள்ளன. இதில் சைவ சமயத்திற்கு மொத்தம் 28 சிவாகமங்களாகும். இந்த 28 சிவாகமங்கள் ஒவ்வொன்றும் சிவமெருமானின் அங்கமாக விளங்குகின்றன இவ்வாகமங்கள் சிவபெருமான் திருவாக்கால் அனந்ததேவர், சீகண்டருத்திரர், திருநந்திதேவர் முதலியோரால் உபதேசமாக வந்தது ஆகும். சிவபெருமானின் ஐந்து முகங்களிலிருந்து இவ்வாகமங்கள் தோன்றின என்று முதலாகமமான காமிகம் கூறுகிறது.

**ஆகமத்தின் உள :**

இவ்வாகமங்கள் மநதிரம, தநதிரம் சித்தாந்தம எனப் பெயர் பெறும. இவை ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என நான்கு பாதங்களாகும்.

1. சரியாபாதம் : சமயம், விசேஷம், நிருவாணம் முதலிய தீட்சைகளேப் பற்றியும், ஆச்சாரியாபிஷேக முறைகளேயும் விளககுகிறது.

**சிவாகமங்கள் இருபத்தெட்டு :**

சிவாகமங்கள் மொத்தம் இருபத்தெட்டாகும். அவைகள் 1. காமிகம், 2. யோகஜம், 3. சிந்தியம், 4. காரணம், 5. அசிதம், 6. தீப்தம், 7. சூக்குமம், 8. சகஸ்ரம், 9. அம்சுமான், 10. சுப்பிரபேதம், 11. விஜயம், 12. நிச்வாசம், 13. சுவாயம்புவம், 14. ஆக்நேயம், 15. வீரம், 16. ரௌரவம், 17. மகுடம், 18. விமலம், 19. சந்திரஞானம் 20. முகபிம்பம், 21. புரோத்கீதம், 22. லளிதம், 23. சித்தம், 24. சந்தானம், 25. சர்வோக்தம், 26. பாரமேசுரம், 27. கிரணம், 28. வாதுளம.

இநத 28 சிவாகமங்களுள் 207 உபாகமங்கள் இருக்கினறன. அவை யாவன.

**மூலாகமத்துள் உபாகமங்கள் :**

1. காமிகம : வக்த்தாரம், பைரவோத்தரம், நாரசிம்மம் (மிருகேந்திரம).

2, யோகஜம்: தாரம், வீணுசிகோத்ரம், ஆத்மயோகம், ஸந்தம், ஸந்ததி.

3. சிந்தியம் : சிந்தியம், சுபகம், வாமம், பாபநாசம, பரோத்பூதம், அம்ருதம்.

4. காரணம : காரணம், த்வேஷ்டம், பாவனம், மாரணம், தௌர்க்கம், மாஹேந்திரம், பீமஸம்ஹிதை.

5. அஜிதம : ப்ரபூதம், பரோத்பூதம், பார்வதி ஸம்ஹிதை, பத்மஸம்ஹிதை.

6. தீப்தம் : அமேயம், சப்தம், ஆச்சாத்யம், அசங்கியம், அமிருதோஜஸம், ஆனந்தம், மாதவோத்பூதம், அற்புதம், அக்ஷயம்.

7. சூட்சுமம்: சூட்சுமம்.

8. சகஸ்ரம் : அதீதம், மங்களம், சுத்தம், அப்ரமேயம், ஜாதிபாக், ப்ரபுத்தமம், விபுதம், ஹஸ்தம், அலங்காரம், சுபோதம்.

9. அம்சுமான் : வித்யா புராண தந்திரம், வாஸவம், நீலலோஹிதம், ப்ரகரணம், பூததந்திரம், ஆத்மாலங்காரம், காச்யபம், கௌதமம், ஐந்திரம், பிராமம், வாசிட்டம், ஈசானம்.

10. சுப்பிரபேதம் : சுப்பிரபேதம்.

11. விஜயம் : உற்பவம், சௌமியம், அகோரம், மிருத்யுநாசனம், கௌபேரம், மகாகோரம், விமலம், விஜயம்.

12. நிச்வாசம் : நிச்வாசம், நிச்வாசோத்தரம், நிச்வாசசுகோதயம், நிச்வாசநயனம், நிச்வாசகாரிகை, நிச்வாசகோரம், நிச்வாசகுய்யம், மந்திர நிசவாசம்.

13. சுவாயம்புவம்: பிரஜாபதிமதம், பத்மம், நளினோற்பவம்.

14. ஆக்னேயம் : ஆகனேயம்.

15. வீரம் : பிரஸ்தரம், புல்லம், அமலம், பிரசோதகம, அமோகம், மோக சமயம், சகடம், சகடாதிகம், பத்திரம், விலேகனம், வீரம், அமலம், போதகம்.

16. ரௌரம : காலாக்கியம், காலதகனம், ரௌரவம், ரௌவரோத்ரம், மகாகாலமதம், ஐந்திரம்.

17. மகுடம: மகுடம், மகுடோத்தரம.

18. விமலம் : அனந்தம், போதம், ஆக்கிராந்தம், விருஷலிங்கம், விருஷோத்தரம், விருடோற்புதம், இரௌத்திரம், சூதந்தம், தாரணம், சுரேவதம், அதிக்கிராந்தம், அட்டஹாசம், பத்திரவிதம், அர்ச்சிதம், அலங்கிருதம், விமலம்.

19. சந்திரஞானம்: ஸ்திரம, ஸ்தானம் மகாந்தம், வாருணம, நந்திகேசுரம், ஏகபாதம், சங்கரம், நீலருத்திரகம், சிவபத்திரம், கல்பபேதம், ஸ்ரீமுகம், சிவசாசனம், சிவசேகரம், தேவிமதம்.

20. முகபிம்பம் : சதுமுகம், சமத்தோபம், பிரதிபிம்பம், அயோகஜம், ஆன்மாலங்காரம், வாயவியம், பட்டசேகரம, தௌடிகம, துடிநீரகம், குட்டிமம், துலாயோகம், காலாத்தியேயம், மகாசௌரம், நைருதம், மகாவித்தை.

21. புரோத்கீதம : வாராகம், கவசம், பாசபந்தம், பிங்கலாமதம், அங்குசம், தண்டதரம், தனுதரம், சிவஞானம, விஞ்ஞானம், ஸ்ரீகாலஞானம், ஆயுர்வேதம, தனுர்வேதம், சர்பதம்ஷ்டரவிபேதனம், கீதம், பரதம், ஆதோத்தியம்.

22. லளிதம : லளிதம், லளிதோத்தரம், கௌமாரம்.

23. சித்தம் : சாரோத்தரம், ஔசனசம், சாலாபேதம், சசிமண்டலம்.

24. சந்தானம் : இலிங்காதியட்சம், சுரோத்தியட்சம், அமரேசுரமீ, சங்கரம், அசங்கியம், அனிலம், துவந்தம்.

25. சர்வோக்தம் : சிவதருமோத்தரம், வாயுபுரோத்தம், திவ்யப்புரோத்தம், ஈசானம், சற்வோத்கீதம்,

26. பாரமேசுரம் : மாதங்கம், யட்சணிபதுமம், பாரமேசுரம், புட்கரம் (பௌட்கரம்), சுப்பிரயோகம், சாமானியம், ஹம்சம்.

27. கிரணம் : காருடம், நைருதம், நீலம், இருட்சம், பானுகம், தேனுகம், காலாத்கியம, பிரபுத்தம், புத்தம்.

28, வாதுளம் : வாதுளம், வாதுளோத்தரம், காலஞானம், பிரரோகிதம், சருவம், தருமாத்மகம், நித்தியம், சிரேட்டம, சுதம், மகாஎனம், விசுவம், விசுவான்மகம்.

இவ்வாறாக 207 உபாகமங்கள் மூலாகமத்துள் இருக்கின்றன.



பொன் மொழிகள் :

## ஒரு சொல் கேளீர்!

கடல் மிகப் பெரியதுதான. ஆனால் அதன நீரின் ஒரு சொட்டுகூட தாகத்தைத் தணிக்கப் பயன்படுவதில்லை. ஊற்று நீர் சிறியதாக இருக்கலாம். ஆனால் அது தாகம் தணிக்க உதவுகிறது. அதுபோல இருள் சூழ்ந்த வாழ்க்கைக்கு அடுக்குமொழி பேசும் மேடைப் பேச்சாளனால ஒளி கிடைத்து விடுவதில்லை. ஆனால் அனுபவ ஞானியின் ஒரு சொல் வாழ்க்கையை முற்றிலும் மாற்றி அமைத்து விடுகிறது.

—ஸ்ரீஸ்ரீக்ருஷ்ணப்ரேமி சுவாமிகள்.

# "தை" சிறக்கவே மார்கழி

உலகிலுள்ள மக்கள் அனைவரும் ஆவலோடு வரவேற்பது இன்ப வாழ் வினைத்தான். துன்ப வாழ்வினைத் துரத்தி விரட்டவே துடிக்கின்றனர் மக்கள். இன்பவழி நோக்கியே விழித்துக் காத்துள்ளது மானிட மனது என்ற எதிர்பார்ப்பின் மூலம் எழுந்ததுதான், "தை பிறந்தால்...... வழி பிறக்கும்..." என்ற பழமொழி.

"தை பிறந்தால் வழி பிறக்கும்" என்று சொல்வதன் தத்துவம்தான் என்ன? — மார்கழி மாதம் இறை வழிப்பாட்டிற்கு உகந்தது என்ற தொரு உயரிய கருத்து நிலவுவதால் தான்! மாதங்களிலே மற்ற மாதங் களுக்கு இல்லாத தனி சிறப்பு மார் கழி மாதத்திற்கு உண்டு. இந்து சம யத்தின் மாட்சிமையும், பாரதத்தின் பெருமையும் பின்னிப் பிணைந்து எங் கும் நறுமணம் வீசும் மங்கலமாதம் தான் மார்கழி.

"மாதங்களில் நான் மார்கழி ஆகி றேன்"—எனக் கீதையில் கூறினன் கண்ணன். தமிழ் மக்களுக்கு மார்கழி முப்பது நாட்கள் மற்றும் தை மாதத் தின் தொடக்கமும், மகிழ்ச்சியையும், இன்பத்தையும், மன நிறைவையும் தரும் காலமாகும். வெம்மையும், மாரியும் இன்றி இயற்கையான குளிர் சாதனமுடைய காலமிது. வயல் வெளிகளில் எல்லாம் நெல் மணிகள் நிறைந்து நிற்கும் தென்றலின் தாலாட்டில் அவை அசைந்தாடி குலுங்கி நிற்கும். நீர் நிலைகளில் எல் லாம் தண்ணீர் நிறைந்து தளும்பி நிற்கும். பனித்துளி படர்ந்த பசுமை யான புல்தரை நாடெங்கும் பரவி இருக்கும். வறுமையில் வாடும் மக்க ளும் கூட வரும் 'தை' யில் உள்ள அறுவடையில் வறுமை நீங்கும் என அகம் மகிழும் காலமிது. இந்த மகிழ்ச்சியின் விளைவாக கொண்டா டப்படும் விழாவே பாவை விழா.

மக்கள் வைணவராக இருந்தாலும், சைவராக இருந்தாலும் உள்ளத்தால் ஒருவரே என்பதை பாவை விழாக்கள் மெய்ப்பிக்கின்றன. சைவத்திலும், வைணவத்திலும் காணப்படும் ஒரு மைப் பாட்டுக்கு இப்பாவை விழா ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன் நாளில் நம் நாட்டிலுள்ள சிவ ஆலயங் களில் திருவெம்பாவையும்; வைணவ ஆலயங்களில் திருப்பாவையும் ஓதப் படும் வழிப்பாட்டு வழக்கம் உண்டு. இவ்விரு பாவைகளும் சமயப்புகழ் பெற்றவை. பாவை நூல்களுள் — திருவெம்பாவையும், திருப்பாவை யும் முதன்மை இடம் பெறுபவை களாகும்.

மதிநிறைந்த நன்நாளாம் மார்கழி முதல்நாளில்தான் மாயக்கண்ணனி டம் மயங்கிய ஆண்டாள் மணிவண் ணனின் புகழ் பாடிப் புறப்பட்டது. ஆயர்பாடி வாழ் அந்த அற்புதத்தெய் வத்தின் அதிசய செய்கைகள் தான் எத்தனையெத்தனை; மாயக்கண்ணனின் மர்மம் நிறைந்த மாயச்செயல்கள் தான் எத்தனையெத்தனை; அளவிட்டுக் கூறஇயலுமா! சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாள் செப்புகிறாள். "மார்கழி மாதத்தின் வைகறையில் நீராடினால், எங்கும் நிறைந்து கருணை புரியும் கருமை நிற கண்ணனின் அருள் எளி தில் கிட்டி விடும். நீராடுதலுக்கே அவன் அருள் கிடைக்கிறதென்றால்; மார்கழி மாதத்திலே அவனது புகழைப் பாடினால் நாட்டில் கலகமும், கேடும் அல்லவா காணமல் போய் விடும். மாதம் மும்முறை மாரி தன் கடமையை மழையாய் கொடுக்கும், செந்நெல் சிறக்கும், பசுக்களின் பால்வளம் பெருகும், நாட்டில் குறையாத செல்வம் சேர்ந் தோங்கும்.

இயற்கையை யொட்டியும், இயற் கையின்மூலம் கற்பிக்கப்படும் உயரிய கருத்துகளின் உரிய வழியினில் வாழ் வதுதானே, இந்து மதம் கூறும் ஏற்ற மிகு கருத்து. மானிடர்கள் இயற் கையைப் புறக்கணிப்பதால்தான், இயற்கையும் இவ்வுலகினை புறக்கணிக் கிறது — மாறு படுகிறது — மாரி பொய்க்கிறது — செந்நெல் சேத

## சீர்காழி எஸ். குமார்.

மடைகிறது— பசுக்கள் பாவமின்றி கொடுமை படுத்தப்படுவதால் பால் வளம் குறைகிறது — பாவமும், பட் டினியும் பரவி, செல்வம் சிதல மடைந்து நாடு வறுமையின் பிடியிலே வாழ்க்கை நடத்துகிறது.

நட்சத்திரங்கள் இருபத்தேழில் "திரு" என்ற அடைமொழி பெற்ற நட்சத்திரங்கள் இரண்டு. அவை ஆறுவது நட்சத்திரமாகிய திருவாதி ரையும், இருபத்திரண்டாவது நட் சத்திரமாகிய திருவோணமும் ஆகும். திருவாதிரை ஈசனுக்கு உகந்தது; திருவோணம் திருமாலுக்குரியது. திருவாதிரை நட்சத்திரத்தில் வரும் திருவாதிரைத் திருநாளும்; திருவோ ணத்தில் கொண்டாடப்படும் வை குண்ட ஏகாதசியும் மார்கழி மாதத் திலே வருவது மார்கழி மாதத்தின் மற்றொரு மாபெரும் சிறப்பாகும்.

மார்கழி மாதத்தின் திருவாதிரை தினத்தன்று சிவபெருமானுக்கு சிறப்பு வழிபாடுகள் மேற்கொள்ளப்

படும். சிவபெருமானை 'ஆதிரையின் முதல்வன்'' என்றும் 'ஆதிரையான்' என்றும் அழைப்பர். திருவாதிரை திருவிழாக்காண தில்லையில் நடைபெறும் 'ஆருத்திரா' தரிசனத்தன்று மாமலையாய் கூடுவர் மக்கள். ஆதிரை திருநாள் அன்று ஆலய தரிசனம் செய்வது அவசியமானதாகும். தரிசனம் வரும் பகதர்களுக்கு சிவாலயங்களுக்கெல்லாம தாயான சிதம்பரததில சிவபெருமான், நடராஜர் கோலத்தில் காட்சி அளித்து அருள்புரிவது இதயத்திற்கு இன்பம் அளிக்கும் ஓர் ஒப்பற்ற காட்சி ஆகும. உலகே அன்பின் அடிப்படையில் அமைநதது என்பதனையே அக்காட்சி காட்டுகிறது. "தில்லையம்பலைத் தரிசிகக எந்நாள் வருமோ'' என்று நந்தன் ஏங்கியது அக்காட்சியின் மகிமையை அறிந்து தானே—!

"மார்கழி மாதம் திருவாதிரை நாள் வரப்போகுது ஐயே!'' என்று நந்தனுர் பாடியதாக, கவி கோபால கிருஷ்ணபாரதி கூறுவதிலிருந்து, ஆதிரைத் தரிசனம் காண ஆவல் கொண்ட திருநாளை போவாரின் திருவுள்ளம்தெளிவாகிறது. திருவாதிரை நாள் அன்று நோன்பு இருத்தலை சிவ பக்தர்'கள் உயர்வான ஒரு பாக்யமாக வேகொள்வர். "ஓம்'' என ஒலிககப் பெறும் பிரணவமானது அந்நாளின் மேன்மையை அதிகபடுத்தி விடுகிறது. "உலகெல்லாம் ஓங்காரத் திருவாகி நின்ற சிவபெருமானே'' என்று அவன் திருவருட்பயனைப் பெறுவதற்கு ஓங்கார ஜெபம் அவசியம் என்பதை உணர்ந்துதான் உணர்த்தியுள்ளார் சுநதரமூர்த்தி நாயனுர்.

திருமால் திருவோண நட்சத்திரத்தில் அவதரித்தவர். அதனுல்தான் மார்கழி திருவோணத்தில் சங்க காலம் தொட்டே மக்கள் பாவை விழாவும், வைகுண்ட ஏகாதசியும் கொண்டாடி வைகுணட நாதனைத் வழிப்பட்டு பயனடைகிருர்கள். திருவோண நட்சத்திரததை இலததின் மொழியில் 'ஆக்விலா' (Aqvila) என்பர். இதன் பொருள் 'கழுகு' என்பதாகும். இந்த நட்சத்திரத்தின் அமைப்பு கழுகு போன்று காட்சி அளிப்பதால் இப்பெயா ஏற்பட்டது. இந்த நட்சத்திரம் வட அர்த்த கோளத்தில் மகர ராசியில் அமைந்துள்ளது.

இத்திருவோணத் திருநாள் அனறு வைகுணடநாதனை வாழ்த்தித துதி பாடி வணங்குகின்ற பக்தர்களை வழுவாது காப்பான வைகுணடன், துதிப்பவர்களின துயர்களைந்து துணை நிற்பான். மார்கழி திருவோணத்தில் ஏகாதசி விழாகாணும் ஏகாந்தன் திருவேங்கடவன். நம் இந்து மதத்தவர்களுககு மாாகழியின் முப்பது நாட்களுமே இறை வழிப்பாட்டிற்கு ஏற்றநாள் ஆகும். அந்நாட்களில் ஆணடவனின் பாதத்தினை போற்றி, "அச்சுதா! அமரர் ஏறே! ஆயர் தம் கொழுந்தே'' என அவன திருநாமங்களை வேணடினல், துன்பம் நீக்கி, துயர் போக்கி மறுமையின்றி வைகுந்த மென்னும் மோட்சத்தை அடையலாம். இதனையே நம்மாழ்வார்.

" சரணமாகும் தனதாள் அடைந்தார்க்
கெலலாம்
மரணமானல் வைகுந்தம் கொடுக்கும்
பிரான் '' என்கிறர்.

விரதங்கள் என்றலேஉடலைவாட்டி ஞானத்தைப்பெறும மார்க்கம் என்று கொள்வது தவறு. இறைவனின் புகழைப்பாடும் பாடல்களைப் பாடினலே போதும். இதுவும் இயலவில்லையாயின் இறைவன் மீது பாடப்படும் இசைப்பாடல்களைக் காதினல் கேட்டாலே போதும். அதுவே நம்மை உயர்நிலைக்கு உயர்த்தி விடும். இதனையே.

" சொனமாலை ஓதும அடியார்கள்
வானில் அரசா ள்வர் ''

எனற வரிகளின மூலம் விளக்குகிறர் திருஞான சமபந்தமூர்த்தி நாயனர்.

மார்கழிமாதம் முன்பனி காலமாகும். இமமாதத்தின் அதிகாலை பொழுதான நான்கரை முதல ஆறு மணி வரையிலானநேரத்தை 'பிரம்ம முகூர்த்தம்' எனபர். இந்நேரம் இறைவனின் அனுககிரகம் எளிதில் கிட்டும் நேரம் என்பது நியதி. இதனை உணர்ந்துதான வித்தைகள், விளையாட்டுகளில் ஈடுபடுவோர், கல்வி, இசை கற்போர் அதிகாலை பொழுதினில் பயிற்சி செய்யவேண்டுமென வலியுறுத்தப்படுகிறது. ஏனைய மாதங்களை காட்டிலும் கடவுளின் கருணைமிகுந்த மார்கழி மாதத்தில் இத்தகையப் பயிற்சியினைப் பெறுவோர், ஆணடவனின் அருளால் அதிக பலனையும், சக்தியையும், ஆசியையும் பெறுவது நிச்சயம்.

மார்கழி மாதத்தின பிரம்மமுகூர்த்தத்தில் வீசும் 'ஓசோன ' (Ozoone) காற்றனது ஆஸ்மா, மற்றும் சுவாச நோய் உள்ளவர்களைக்குணப்படுத்தும் வகையில் உள்ளது அதனைச் சுவாசித்துப் பயிற்சி பெறுவோருக்கு நோயின் கடுமை குறைந்துள்ளது என தற்கால மருத்துவம் கூறுகிறது.

'மார்கழி மாதத்தில் மானிட வாழ்வானது முன் எழுதல், முறையான பயிற்சி, முறையான வாழ்க்கைநெறி என வரையறுக்கப்பட்ட வாழ்க்கை முறைகளால் தெளிவான சிந்தனைக்கு வாய்ப்புள்ளது சிந்தனையின் பயனய் செழிப்பான வாழ்க்கைக்கான முன்னேற்ற பாதை முடிவெடுக்கப்படுகிறது' என்ற மனித நாகரிக வளர்ச்சியின கோட்பாட்டின்படி, மார்கழியின் பயிற்சி, தையில் வரும் வெற்றியின் முயற்சி ஆகிறது. மேலும், அழுததமான நம்பிக்கையும், எண்ணமும், அதன் உறுதியின் காரணமாய் குறிக்கோள் ஆகி, குறிக்கோளுக்கு வடிவமாய் செயல்பாடு உருவாகி, செயல்பாட்டால் வெற்றியை பெற முடியுமென்ற சமுதாய — உளவியல் உணமைககேற்ப முன்னேற்றத்திற்கான முயற்சியினை மார்கழியில் மேற்கொள்வதன் மூலம் 'தை' யில் முயற்சியின் திருவினையை பெறமுடிகிறது என்று உணரலாம்.

"ஆனமீகம் கலவாத வாழ்வும், ஆன்மீக நெறிகடுட்படாத அரசியலும் மககளுக்கு பயனபடாது'' எனற முதறிஞா இராஜாஜியின பொன மொழிககேற்ப, எலலா மாதங்களுக்கும் சிகரம் வைத்தாறபோல் திகழும் மார்கழியில் ஆனமீக பயிறசி மற்றும், முறையான வாழ்ககை நெறிகளின மூலம் நபிக்கையோடும், இறைவனின் அருட்பார்வையினை வேண்டி இறைஞ்சுவதால் தை மாதத்தில் ஆண்டவனின் அருள்வழி நமமை வநது அடைகிறது.



# பட்டி வழிபட்ட பட்டீச்சரர்

திரு. V. S. சீனிவாசன்,
தஞ்சாவூர்.

நாயன்மார் ஒருவர் ஒரு கோயிலிலுள்ள பரமசிவனை வழிபட்டார். அத்துடன் அவர் திருப்தியடையவில்லை. பக்கத்து ஊரில் கோயில் கொண்டுள்ள அப்பரமசிவனையும் தரிசிக்க விரும்பினார். அப்போது சூரியன் மிதுன ராசியில் பிரவேசிக்கிற முதுவேனிற்காலம். வெயிலின் கொடுமை தாங்க முடியவில்லை. ஆதலால் அந்த ஊருக்கு அவரால் நடந்து செல்ல முடியவில்லை. மனம் வெதும்பினார். பரமசிவனை வேண்டினார்.

இதையறிந்த பரமசிவன் அவருக்கு உதவியாக பூத கணங்கள் மூலம் ஒரு அழகிய முத்துப்பந்தலை அனுப்பி, நாயன்மாரின் தலைக்குக் குடையாகப் பிடித்து, வெயிலின் கொடுமையிலிருந்து அவரைக் காப்பாற்றி, தன்னை வந்து தரிசிக்க உதவினார்.

அன்னை பராசக்தியின் திருமுலைப் பால் அருந்தினாரே, அந்த திருஞான சம்பந்தர்தான் அந்த நாயனார். முத்துப்பந்தலை அனுப்பி உதவியவர் "பட்டீச்சரர்". இவரைத் தரிசிக்க, கும்பகோணத்திற்குத் தென் மேற்கில் ஐந்து மைல் தூரத்திலுள்ள பட்டீச்சரத்துக்குச் செல்ல வேண்டும். கும்பகோணம் பஸ் நிலையத்திலிருந்து பட்டீச்சரத்துக்கு உள்ளூர் பஸ் வசதியுண்டு.

பட்டீச்சரம் (பட்டீசுவரம்) ஒரு குககிராமம்தான். இருப்பினும்,

"நிழல கூடுபொழில் சூழ்பழை சையுள
மாட மழபாடியுறை பட்டிசரம்"

என்று சம்பந்தப் பெருமான் அருளிய படி, பொழில படை சூழ்ந்து காவிரி, திருமலை ராணி—இவ்விரு ஆறுகளுக் கிடையில் இயற்கை வளததுடன் அமைநதுள்ளது. இததலம் சரிததிரப் பெருமைகளும், புராணப் பெருமைகளும்வாய்ந்தது. கல்வெட்டுகள், மற்றும் சிற்பச் சிறப்புகள் நிறைந்தது.

தேவாரப் பாடல் பெற்ற 274 தலங்களில்-காவிரிக்குத் தென்கரையிலுள்ள 127 தலங்களில்-இது 23-ஆவதாகும். திருஞானசம்பந்தரால் பாடப் பெற்றது.

சோழ மன்னர்கள் உறையூர், காவிரிப் பூம்பட்டினம், பழையாறை, தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம் என்ற ஐந்து இடங்களிலிருந்து அரசு புரிந்து வந்தனர். முடிகொண்ட சோழபுரம் என்னும் பழையாறையின் பிரிவுகளுள் ஒன்றாக பட்டீச்சரம் விளங்கியது.

மற்றவை-திருச்சத்தி, முற்றம், வடதளி, திருமேற்றளி, சோழன், மாளிகை, சுந்தரப் பெருமாள் கோயில், தராசுரம், முழையூர், வள்ளலார் கோயில் முதலியன. பட்டீச்சரம் 'மழபாடி' என்று வழங்கி வநதது.

அன்னை பராசக்தி இத்தலத்தில் தனித்து தவம் செய்தாள். தேவியின் தவத்திற்கு உதவியாக, காமதேனுப் பசு, தன் புத்திரி 'பட்டி'யை அனுப்பி, தேவிக்கு வேண்டிய பணிவிடைகள் செய்யச் சொல்லியது. தேவியின் தவத்திற்கு உவநது, எம்பெருமான் தமது சடை முடியுடன் காட்சி தந்தார். அதன் காரணமாகவே, அவருககு 'கபர்தீஸ்வரர்' என்ற மற்றொரு பெயரும் உண்டு.

இத்தலத்தின் பெருமையை உணர்ந்த பட்டி, மணலினால் தானும் ஒரு லிங்கம் அமைத்து, நாள்தோறும் பூஜித்து வந்தது. தனது மடியிலுள்ள பாலைச் சுரப்பி லிங்கத்தினமீது வழியச் செய்து-அபிஷேகம் செய்துபரமசிவனை வழிபட்டது. வழிபாட்டிற்கு மகிழ்ந்த சிவபெருமான் லிங்கத்தில் என்றும் நிலையாய் அமர்ந்தார்.

பட்டி வழிபட்ட தலமாதலால், 'பட்டீச்சரம்' என்று பெயர் வழங்கி வருகிறது. அன்னைதேவி வழிபட்டதால், 'தேவி வனம்', "சக்தி வனம்' என்ற இதர பெயர்களும் உண்டு.

இராவணனைக் கொன்று சீதாதேவியை மீட்டு வந்த இராமர், தாம் ஒரு லிங்கத்தையும், ஹனுமான் கொண்டு வந்த மற்றொரு லிங்கத்தையும் சேதுவில் பிரதிஷ்டை செய்து வழிபட்டாராம்? ஹனுமான் கொண்டு வந்த மற்றொரு லிங்கத்தை, தான் அயோத்திக்குத் திரும்பிச் செல்லுகையில் பட்டீச்சரமாகிய இத்தலத்தில் பிரதிஷ்டை செய்து, தன் வில்லின் முனையால் ஒரு கிணற்றையும் தோண்டி, அநத நீரால் லிங்கப்பெருமானுக்கு அபிஷேகம் செய்து வழிபட்டு, பிரம்மஹத்தி தோஷம் நீங்கப் பெற்றாராம். இதனால், வாலியைக் கொன்ற தோஷமும் நீங்கப் பெறறாராம். இது தலபுராணம் கூறும் செய்தி.

மாளவ தேசத்து 'தர்ம புரம்' என்ற ஊரில் தவம் செய்து வந்த மேதாள முனிவரின் கோபத்துக்கு உள்ளாகிய, 'தர்ம சர்மா' என்ற மாணவன நாயின் உருவமடைய சபிககப்பட்டான. சாபம் நீங்கப் பெற, மேதாள முனிவர் கூறிய உபாயப்படியே, பட்டீச்சரத்துக்கு வந்து அங்குள்ள வன்னிமரத்தடியில் நாயுருவுடன தர்மசர்மா வந்து நின்றான.

அங்குள்ள ஞான வாவிக் குளத்தில் நீராடிய பல பெரியோர்கள்



பட்டீஸ்வரம் துர்க்கை அம்மன்.

சபையிலிருந்து தெறித்த நீர் அந் நாயின் மேற்பட்டவுடன் தர்ம சர்மா என்ற அம்மாணவன் தன் பழைய வடிவம் பெற்று ஞான வாவியில் நீராடி பட்டீச்சரரையும், அம்மை யாரையும் வணங்கி வாழ்த்திச் சென்றான்.

தவிர, காம்பீலி நகரத்தில் சித்திர சேனன் என்னும் அரசன் புத்திரப் பேறு இல்லாததால் வருந்தினான். அதிதகன் என்ற முனிவரின் உப தேசப்படி சித்திரசேனன், மனைவி யுடன் பட்டீசுவரம் சென்று ஞான வாவியில் நீராடி, வன்னி மரத்தடி யில் பிரம்ம ஞான மந்திரத்தையும், குமார மந்திரத்தையும் ஜெபித்து, பெருமானை வழிபட்டு, புத்திரப்பேறு பெற்றான்.

இங்கு மார்க்கண்டேயர் வழிபட் டார். விசுவாமித்திரர் முனிவர் காயத்திரி சித்திக்கப் பெற்ற பிரும்ம ரிஷி பட்டம் பெற்ற இடமும் இது தான் என்பர். கோயில் ஐந்து கோபுரங்களையுடையது. ஊரில் பெரும்பாலான மக்கள் வசிக்கும் இடத்திற்கும் பேருந்து நிலையத்திற்கு சமீபத்தில் வடக்குக் கோபுர வாயில் இருப்பதால், அநேகமாக எல்லோரும் இதையே பிரதான வாயிலாக உப யோகித்து வருகின்றனர்.

சிவன் கோயிலே ஆயினும், இங்கு துர்க்கை பிரபல்யமாய் விளங்கி வருகிறாள். துர்க்கைக்குத் தான்பிரதானம். வடக்குப்புற வாயி லின் வழியாக உள்ளே நுழைந்ததும், நமக்கு முதலில் காட்சியளிப்பது துர்க்காதேவிதான். சுமார் ஆறு அடி உயரத்தில் கம்பீரமாய் நிற்கும் கோலத்தில் தனிக்கோயில் கொண் டிருக்கும் இவளை ஊரார் 'கோட்டை வாயில் துர்க்கை' என்றே அழைக் கின்றனர்.

இத்துர்க்கையம்மன் மிக்க சக்தி வாய்ந்தவள், மிக்க வரப் பிரசாதி. கல்யாணமாகாத ஆண், பெண்கள், தீராத நோயினால் பீடிக்கப்பட்டவர் கள், குடும்பக் கஷ்டத்தில் தவிப்பவர் கள் இங்கு ஞாயிறு, வெள்ளி, செவ் வாய்க் கிழமைகளில் வந்து ஞான வாவியில் நீராடி அம்மனை வழிபட் டால் அக்குறைகள் நீங்கிவிடும். அதனால் இக்கிழமைகளில கோயிலில் கூட்டம் அதிகமாகக் காணப்படு கிறது.

துர்க்கையம்மனின் உடம்பில் எல் லாம் நேர்ச்சைக் கயிறுகள்-ஆம்! மஞ்சள் கயிறுகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. அது போலவே எலுமிச்சைப் பழமும்! இவ்வழக்கம் வெகு காலமாக நடந்து வருகிறது

என்பது குறிப்பு. கோயிலில் 'நெய் தீபம்' எப்பொழுதும் எரிந்து கொண்டே இருக்கும். அம்மனின் சாந்த சொரூபமான அழகை வர்ணிக்க முடியாது. கண்கண்ட பிரத்தியட்ச தெய்வம் என்றே கூறிவிடலாம்.

துர்க்காதேவியைத் தரிசித்து, பின் உள் கோபுர வாயிலை தாண்டிச் சென்றால், மகா மண்டபத்துக்கு வந்து சேரலாம். முதன் முதலாக நாம் காணும் நந்தி, சற்று இடது புறம் விலகியிருக்கிறது. இது மட்டுமல்ல! இக்கோயிலிலுள்ள எல்லா நந்திகளுமே சந்நிதியை விட்டு இடது அல்லது வலது புறம் விலகித்தான் அமைந்திருக்கின்றன.

திருவலம் சுழியிலுள்ள பெருமானை வணங்கிய பின், பட்டீச்சரரை வணங்கவந்த திருஞானசம்பந்தருக்கு வழி விடும்படி இறைவன் நந்திதேவருக்குக் கட்டளையிட்டார். இதன் காரணமாகவே நந்திகள் சற்று விலகியிருக்கின்றன. (திருஞான சம்பந்தருக்குச் சந்நிதியை விட்டு நந்தி விலகிய மற்றொரு இடம் திரும்பூந்துருத்தியாகும். தற்காலம் வழக்கில் 'திருப்பந்துருத்தி' என்றே இங்குள்ள மக்கள் அழைக்கிறார்கள்).

இந்த மகா மண்டபத்தில் நாம் முதலில் காணுவது பட்டிப்பசு. லிங்கத்தைப் பூஜிக்கும் காட்சியை வர்ணித்துக் காட்டும் கல் தூண்தான்! பட்டி சிவலிங்கத்துக்குப் பக்கத்தில் நின்று கொண்டு தன் தலையை இடது புறம் திருப்பி வளைத்து, தன் மடிக் காம்புகளைச் சொரிந்து, லிங்கத்தின் மீது பால் சுரக்கச் செய்து, அபிஷேகம் செய்து பூஜிக்கும் காட்சி தான் நம்மைப் பிரமிக்கச் செய்யும். இங்குள்ள மூலவருக்கு 'பட்டீச்சரர்' என்று பெயர் வரக்காரணம் இதுதான்.

இங்குள்ள மகா மண்டபத்தை ஒரு 'சிற்பக் கலைக்கூடம்' என்றுதான் சொல்ல வேண்டும். பற்பல கல் விக்கிரகங்கள் மண்டபத் தூண்களை அழகுபடுத்துகின்றன. இவைகளுள் முக்கியமாகக் குறிப்பிடப்பட வேண்டியவை—அர்த்த நாரீசுவரர், பிட்சாடனர், ஹேமபரிஷி, சந்திரசேகரர், சுப்பிரமணியர், சோழ மந்திரி பிரதானிகள் முதலியவைகளாகும்.

அப்ஸர ஸ்திரீ வீணை வாசிக்கும் காட்சி நம்மை மிகவும் பரவசப் படுத்துகிறது. சில தூண்கள் சிங்கம், யாளியினுடைய உருவங்களைத் தாங்கி நிற்கின்றன. இத்தலத்தில் பரசுராமர் வழிபட்டதற்கு ஆதாரமாக அவரது உருவமும் இங்கு உள்ளது. சில தூண்களில் சிங்கம் அடியில் பொருத்தப்பட்டுள்ளது. நான் அநேக தடவை இக்கோயிலுக்குச் சென்றிருக்கிறேன். மகா மண்டபத்திலுள்ள கற்சிலைகளும், சிற்பங்களும் அடிக்கடி சுத்தம் செய்யப்பட்டு எண்ணெய் பூசப்பட்டுப் பளபளப்புடன் புதியவைபோல் காட்சியளிக்கின்றன. இவ்விஷயத்தில் கோயில் நிர்வாகிகள் பாராட்டிற்குரியவர்கள்.

இரண்டாவது பிராகாரத்தை வலம் வந்தால் தேவாரம் பாடிய மூவர் சந்நிதியையும், மதவாரணப் பிள்ளையார், கால பைரவர் சந்நிதிகளையும் காணலாம்.


பேரூர் பட்டீஸ்வரர் திருக்கோயில்
திருமதி. கமலா மாரியப்பன-கோவை.

மதவாரணப் பிள்ளையார், ஷண்முகர், பைரவர், துர்க்கையம்மன் முதலிய சிலைகள் சோழன் மாளிகையிலிருந்து கொண்டு வந்து பிரதிஷ்டை செய்யப்பட்டவை. துர்க்கையம்மன் முற்காலத்தில் சோழன் மாளிகைக் கோட்டையின் காவல் தெய்வமாக இருந்ததாகச் சொல்லப்படுகிறது. இதனை, 'Inside the Pattiswaram Temple there is an idol which is now called Kottai Vayil Durgai (the Durga at the fortress gate) One may not be wrong in assuring that this was the idol which presided over the gate way of the Palace fortress'.–T.C.M. குறிப்பிடுகிறது. 'கோட்டை வாயில் துர்க்கை' என்று பெயர் வரக்காரணம் இதுவே!

கோட்டையின் சுற்றளவு கிழமேலடி 650; தென் வடலடி 295. உள்கோபுர வாயிலைக் கடந்து சென்றால் மூலவர் சந்நிதியை அடையலாம். மூலவர் பட்டீச்சரருக்கு 'தேனு புரீச்சரர்','பட்டியப்பர்' என்ற இதர பெயர்களுமுண்டு. ஒரு கல்வெட்டில் 'பட்டீசுவர நாயனார்' என்ற பெயர் காணப்படுகிறது.

மூலவர் சந்நிதிக்கு வெளியே சோமாஸ்கந்தரும், திருஞான சம்பந்தரும் இடம் பெற்றிருக்கின்றனர். கர்ப்பக்கிருகத்தைச் சுற்றி பிராகாரத்தை வலம் வந்தால், சப்த கன்னிகைகள், ரேணுகை, விநாயகர், மகாலிங்கம், பாலமுருகன், சண்முகன், லக்ஷ்மி, அறுபத்து மூவர், நடராஜர், சூரியன், சண்டிகேசுவரர், நவக்கிரகங்கள் முதலியோரை தரிசிக்கலாம்.

இப்பிராகாரத்தில் முக்கியமாக குறிப்பிடப்பட வேண்டியவர்கள் இராமலிங்கமும் தபசு அம்மனும். காசியிலிருந்து ஹனுமான் கொண்டு வந்த இரண்டாவது லிங்கமே இராமரால் இங்கு பிரதிஷ்டை செய்யப் பெற்று, இராம லிங்கமாக விளங்குகிறார். இராம பிரான் தோற்றுவித்த கேணிதான் அருகில் காணப்படும் 'கோடி தீர்த்தம்'.

பாரசக்தி ஒற்றைக் காலில் தபஸ் செய்யும் காட்சியுடன் கூடிய மற்றொரு விக்கிரகமும் பக்கத்திலேயே இருக்கிறது. இவள்தான் 'தபசு அம்மன்'. அவள் நீராடுவதற்காக உண்டாக்கிய 'தபசுகேணி' பக்கத்திலேயே அமைந்திருக்கிறது. பக்கத்திலேயே பெரிய அளவில் ஒரு பழைய இராமர் படத்தையும் காணலாம்.

மற்றொரு படத்தில் முத்துப்பந்தலின்கீழ் திருஞான சம்பந்தர் அடியார்களுடன் வரும் காட்சியையும், பார்வதி பரமேசுவரன் இருவரும் ரிஷப வாகனத்தில் எழுந்தருளி சம்பந்தருக்குக் காட்சியளிப்பதையும் காணலாம்

உற்சவ மூர்த்திகளில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியது அஸ்திர தேவர், மாணிக்க வாசகர், துர்க்கை, பிடாரி, பிரதோஷ நாயகர், சிவபாத ஹிருதயர், கணபதி முதலியவர்களாவர். உற்சவமூர்த்திகளில் எல்லோரையும் ஒருங்கே கவர்வது "குதிரைச் சொக்கர்". குதிரையின் மீது சவாரி செய்யும் காட்சி இது. இந்த விக்கிரகம் சாதாரணமாகக் காணக் கூடியதல்ல!

அடுத்ததாக நாம் தேடிச் செல்வது, மூலவருக்கு இடது புறம் தனித்து அம்மன் சந்நிதியில் இருக்கும் ஞானம்பிகை. பல்வளை நாயகி என்பது மற்றொரு பெயர். இந்த சந்நிதியில் மகான் கோவிந்த தீக்ஷதர், அவரது மனைவி இவர்களது சிலைகளையும் காணலாம். கை கூப்பிய வண்ணம் இருவரும் கம்பீரமாய் நிற்கின்றனர்.

இவர் தஞ்சையை ஆண்டு வந்த அச்சுதப்ப நாயக்கரிடம் மந்திரியாய இருந்தார். சிறந்த தெய்வ பக்தர். மன்னரிடத்தும் மக்களிடத்தும் மிகவும் அன்பு கொண்டவர். வடமொழி, தென்மொழிப் புலவர்களையும், சங்கீத வித்வான்களையும் ஆதரித்தவர். பல கோயில் திருப்பணிகளைச் செய்தவர்.

இவர் பட்டீச்சரத்தில் திருமலைராஜன் ஆற்றங்கரையில் ஒரு மாளிகையில் வசித்துக் கொண்டு அம்மன் கோயில் திருப்பணி செய்தாராம். அவர் வசித்த மாளிகையின் அடையாளங்கள் இன்னும் உள்ளன. இவர் பிறந்து வளர்ந்த ஊர் பட்டீச்சரமே என்பார்கள். இவருடைய தாய் மாமன்தான் மகான் நீலகண்ட தீக்ஷதர். மதுரை திருமலை நாயக்க மன்னரிடம் மந்திரியாக இருந்தவர். மதுரை ஸ்ரீ மீனாக்ஷியம்மையிடம் மிகுந்த பக்தி கொண்டவர். அநேக வடமொழி நூல்களை இவர் எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

தவிர, கோவிந்த தீக்ஷதர் மன்னனுடைய ஆதரவில் கும்ப கோணத்தில் மகாமகக் குளத்தைப் புதுப்பித்து, அதைச் சுற்றிலுமுள்ள சோடச லிங்க பதினாறு மண்டபங்களைக் கட்டுவித்தார். திருநாகேஸ்வரம் ஸ்ரீ நாகநாதர் கோயிலில் ஓர் மண்டபத்தைக் கட்டுவித்தார். திருவையாறு, கும்பகோணம், திருவிடைமருதூர், திருவலஞ்சுழிமுதலிய இடங்களில் புஷ்ய மண்டபங்களைக் கட்டுவித்ததாகச் சொல்வர்.

இவர் பெயரால் ஏற்பட்ட இடங்கள் அய்யன் பேட்டை, அய்யன் தெரு, அய்யனகடைத்தெரு, அய்யன் வாய்க்கால், குருவையன் குளம் என்பன. இவை பெரும்பாலும் தஞ்சாவூரிலும் திருச்சிராப்பள்ளியிலும் உள்ளன. திருச்சியில் "குருவையன் குளம்" குருவியங்குளமாகி, அது தற்போது ஓர் அழகிய பூங்காவாக உள்ளது. தஞ்சையிலோ அழகிய அய்யன் குளமாக இன்றும் நீர் பெருக்குடன காட்சியளிக்கிறது.

'மந்திரி ஐயன்' என்றாலதான மக்களுக்குத் தெரியும் என்பார்கள். இவர், இவருடைய மனைவியருடைய உருவச்சிலைகள் கை குவித்தவண்ணம் பட்டீச்சரம் அம்மன் கோயிலில் உள்ளன. தவிர, கும்பகோணம் ஸ்ரீ கும்பேஸ்வரர் கோயிலில லிங்க வடிவமாய் உள்ளனா. ★

# இறையுணர்வும் வழிபாடும்



ஸ்ரீ அஹோபில நரசிம்மஸ்வாமி திருக்கோயில்
ஸாவன துர்க்கா- - கர்னாடகம்.

**இறையுணர்வு :**

"கற்றதனு லாய பயனென்கொல
வாலறிவன்
நற்றுள் தோழாஅ ரெனின்"

என்பது வள்ளுவர் வாக்கு. இறைவனை வணங்காவிடில் கற்றதினுல் ஆகும் பயனே இல்லாமல் போகிறது என்பதைத் தெள்ளத் தெளிய எடுத்துரைக்கின்றுர் பொய்யாமொழியார். உலகில் மனிதன அறிவியலினுல் எவ்வளவோ பயனடைநதாலும அவனுடைய மனத்திற்கு அமைதியையும், நிறைவையும் அளிப்பது இறையுணாவே ஆகும். அதனுல்தான் அறிவியல் மேதைகளும், மகாத்மாக்களும் இறைவழிபாட்டைத் தம் கடமைகளில் ஒன்றுகக் கொண்டார்கள. ஆன்றேர்கள் கண்டு கூறிய கருத்துக்கள், சொல்லிய விதத்தில் மாறுபடுகின்றனவே தவிர அவற்றுள் புதைந்துள்ள உண்மைகள் என்றுமே மாறுபடுவதில்லை.

மனிதன் அறிவியலில் வியத்தகு முன்னேற்றம் அடைநதிருப்பினும் உயிர்களின் பிறப்பும், இறப்பும் மட்டும் இன்னும் கேள்விக்குறியாகவே இருக்கின்றது. மனித சக்தியையும மீறிய ஏதோ ஒரு சக்தி அனைவரையும் இயக்கிக கொணடிருக்கின்றது என்பதை அறிவியலாரும் ஒபபுக்கொள்கின்றனர். அநதச் சகதியைத்தான் ஆன்மீகவாதிகள் இறைவனுக-தெய்வமாக தாம் விருமபிய வடிவில் வழிபடுகினறனர்.

**வழிபாடு :**

வழிபாடு என்பது அடிப்படையில் ஒருவகை விருப்பத்தின் வெளிப்பாடே ஆகும். ஆன்மீகக் கூட்டு வழிபாட்டை இன்று இச்சொல் உணர்த்தினுலும், ஒரு மதிப்பு மிக்க வேண்டுதலையே இச்சொல் குறிக்கும். "ஒன்றின் வழிபடுதல்" என்பதே "வழிபாடு" என்ற பெயரில் அமைந்திருக்கிறது. இவவழிபாடு "எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறென்றும் அறியேன் பராபரமே" என பொது நோக்கில் அமைதலும் உண்டு. அன்றியும்,

"ஒருமையுடன நினது திருமலரடி
நினைக்கின்ற
உத்தமர் தம் உறவு வேண்டும்
உளளொன்று வைத்துப் புறமொன்று
பேசுவார்
உறவு கலவாமை வேண்டும"

என்று எண்ணங்களின் வெளிப்பாடாக அமைதலும் உண்டு. எது எப்படி இருப்பினும் 'வழிபாடு' என்பது—தனனலமோ—பொது நலமோ அவரவா கொண்ட விருப்பத்தின் வெளிப்பாடாகவே அமைகிறது என்பது கண்கூடு.

**வழிபாட்டின் நோக்கம் :**

நம்பிக்கைதான் வழிபாட்டின் அடிப்படையாகும். நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படாத எதுவும் வெற்றி பெற இயலாது எனபது நடைமுறையில உணரப்படும் உணமை. இறைவன் மீது வைக்கப்படும் நம்பிக்கையே வழிபாட்டின் அடித்தளமாக அமைதல் வேணடுமெ. உள்ளத்தில் நஞ்சும் உதட்டினில் தேனும் கொணடு நடத்தப்படும நாடகமாக "வழிபாடு" அமைதல் கூடாது. 'உலகிலே இருக்கும் அனைத்து உயிர்களிட்த்தும்

திரு. க. இராமலிங்கம்,
காவேரிப்பாக்கம்.



அன்பு செலுத்துதல் வேண்டும்'' என்ற உயரிய நோக்கமே ''அன்பே சிவம்'' என்ற பொனமொழியாக மலர்ந்தது.

'அனைத்து உயிர்களிடத்தும் அன்பாய் இருத்தல்'என்ற பண்பு, கேட்ட உடனேயே ஏற்பட்டு விடாது. அவ்வுணர்வு படிப்படியாகவே மனித மனத்தில் பதியும். அதற்கு வழி வகுக்கவே 'வழிபடுதல்' எனபது ஏற்படுத்தப்பட்டது. நெஞ்சைஒருமுகப் படுத்தி இறைவனின எண்ணத்தில் தோய்ந்து இருத்தல மூலம் உலக உயிர்களிடம் அன்பு செலுத்தல் வேண்டும் என்பதே வழிபாட்டின் நோக்கமாகும்.

உருவ வழிபாடு :

ஒலிக்கு வரிவடிவம கொடுத்து எழுத்துககளாக்கி, அரிச்சுவடி படிப்போர் முதல ஆராய்ச்சியாளர் வரை, எப்படித் தம் கருத்துககளை வரிவடிவில் வெளியிடுகிறார்களோ அப்படித்தான் அடியவர்களும் தம உள்ளத்துள் தோன்றிய இறையுணர்வையும் 'சிலை' என்ற வடிவில் அமைத்து வழிபடுகின்றனர்.

உளவியலாளரும் ஆழ்ந்த உறக்கத்தில் ஈடுபடுத்தி உள்மனத்தில் படிந்துள்ளதைக் காணமுற்படும்போது ஒரு கரும்புள்ளியையோ, தம் கண்ணையோ, விரல் நுனியையோ உற்றுப் பார்க்கும்படி சொல்லி மனத்தை ஒரு நிலைப்படுத்துதல் எனபது நடைமுறையில் காணுகின்ற காட்சி. இதன் வாயிலாக மனத்தை ஒரு நிலைப் படுத்த ஏதோ ஒருபொருள் தேவைப் படுகிறது என்பது தெளிவாகிறது. இவ்வடிப்படையிலேயே மனித மனத்தைப் பக்தி என்ற வழியில் ஒருநிலைப் படுத்த 'இறைவடிவம்' ஒன்று தேவைப்படுகிறது.

மக்கள் பயன்படுத்தும் உணவு, உடை, உறையுள் முதலியவற்றால் பெறுகின்ற பயன்கள் ஒன்றாகவே இருப்பினும், அவற்றின் வடிவங்கள் அவரவர் விருப்பங்களுக்கேற்ப மாறுபடுவது போல் இறைவணக்கத்திற்கு வடிவம் பயன்பட்டாலும் அவரவர் எண்ணங்களுக்கு ஏறப வடிவங்கள் மாறுபடுகின்றன. நாகரீகங்கள் மிகுநதுள்ள இந்நாளிலும் வாழ்ந்து மறைந்த அறிஞர்களுக்கும், வாழும் மனித மேதைகளுக்கும் உருவச்சிலை எடுப்பதும்; கோட்டங்கள் அமைப்பதும்; படத்திறபபு விழாக்கள் நடத்துவதும் நடைமுறையில் நிகழும் நிகழ்ச்சிகளாகும். அதே நிலையில்தான் அடியவர்களும் தாம் வணங்கும் இறைவனின் திருவுருவத்தை விரும்பியவடிவில் அமைத்துக் ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' போற்றி வழி படுகின்றனர்.

கோயில் வழிபாடு :

'' இருஞ்சுரபிக் கெங்கும் உருக்காண
ஒண்ணாத பால்
முலைப்பால் விம்மி ஒழுகுவது போல்
வெளிப்பட்டருள்வன் அன்பர்க்கே ''

என்பது சிவஞான சித்தியாரின் பாடல். பசுவின் உடலெங்கும் உதிரம் பரவி இருப்பினும் அது பாலாக வெளிப்படுவது மடியின் மூலம்தான்; அதுபோல இறைவன் எங்கும் நிறைந்திருப்பினும் அன்பருக்காக கோயிலில் வெளிப்படுகிறான் என்பது சித்தாந்தம்.

நடைமுறைக் காட்சியைக் கொண்டும் கோயிலின் இன்றியமையாமை உணரப்படும். புத்தகங்கள் எங்கும் கிடைப்பினும் முறையான கல்விகற்க, கல்விக் கூடங்களுக்குச் செல்ல வேண்டி இருக்கிறது. ஏனென்றால் கல்விக் கூடங்களில் முறைப்படி பயிற்சி பெற்ற ஆசிரியர்களால் பாடங்கள் பயிற்றுவிக்கப்படுகின்றன. மாணவரும் செப்பனிடப்பட்ட



பாதையில் சென்று தாம் விரும்பிய 'கல்வி' என்ற இலக்கை அடைகின்றனர். அறிவு வளர வளர சுதந்திர நிலையில் தேவைக்கு ஏற்ப எங்கு வேண்டுமானாலும் சென்று ஆய்வை மேற்கொள்கின்றனர். அதுபோலத் தான் இறைவழிபாடும். ஒழுங்கான சூழ்நிலையில் சீரிய முறையில் வளர்ச்சி பெற அமையும் கலைக் கூடங்களாகக் கோயில்கள் அமைகின்றன

மதங்கள் பலவாக இருப்பினும் அவரவர்கள் ஒருங்கேகூடி வேற்றுமை மறைந்து கூட்டு வழிபாடு நடத்தவும் கோயில்கள் அருளசுரக்கும் பக்திஊற்றுக்களாகத்திகழ்கின்றன. உருவ வழிபாட்டில் மதங்களில் வேறுபாடு காணப்பெறினும், இந்துக்கள - 'கோயில்கள்' என்ற இடங்களிலும்; கிருத்துவர் - 'தேவாலயம்' என்ற இடத்திலும்; முகமதியர் 'மசூதி' என்ற இடத்திலும் ஒருங்கேகூடி வழிபாடு செய்கின்றனர். எனவே பலதரப்பட்டவரும் ஒரே பொருளை நினைத்து ஒன்றாக வழிபடுதலை மேற்கொள்ள கோயில்கள் இன்றியமையாது இருக்கின்றன என்பது தெளிவாகிறது. கோயில்களில்தான் தொடக்கநிலையில் உள்ளவர்களுக்கு இறையுணர்வு ஊட்டப்பெறுகின்றது. கோயில்களைப் பார்க்கும்பொழுதே 'இறையுணர்வு' தோன்ற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் தான் கோயில் கோபுரங்களையும் உயரமாக எழுப்பினார்கள்.

"திருக்கோயில் என்பது கட்டிடமன்று, அஃது அந்நினைவை ஊட்டுவதுமன்று, திருக்கோயில் இயற்கையையும், இயற்கையின் உள்ளுறைப் பொருளையும நினைவூட்டுவது" என்ற திரு. வி. க. வின் கருத்து கோயில்கள் அமைந்ததின் நோக்கத்தையும் அதன் இன்றியமையாமையும் உணர்த்தும்.

**கோயில் வழிபாட்டின் பயன்கள்:**

கோயில் வழிபாட்டால் உடற்தூய்மை, மனத்துய்மை, பெரியோரிடத்துப் பணிவு, செவிக்கினியவற்றைக் கேட்டல், குறிப்பிட்டக் காலங்களில் குறிப்பிட்ட செயல்களைச் செய்தல் முதலியவை வளர்கின்றன.

இங்கு, ஒன்றை மட்டும் மனதில் கொள்ள வேண்டும். மனத்தில இறைவனைக் காணாமல் புறத்திலே அவனைக் காணமுடியாது. உண்மையான கடவுள் நம்பிக்கையின்றிக் கோயிலுக்குச் செல்வதால் மட்டும் இறையுணர்வு ஏற்படாது. "உள்ளத்தில் காண்பாய் எனில் கோயில் உள்ளேயுங் காணபாயடி" என்ற கவிமணியின் பாடல்வரிகள இவ்வுண்மையை உணர்த்தும். அதுமட்டுமல்லாமல் கோயில்களில செய்யும் வழிபாடு மனம் ஒன்றிச் செய்வதாக இருத்தல வேண்டும்.

"கையொன்று செய்ய வழியொன்று
நாடக் கருத்தொன்
றெண்ணப் பொய்யொன்று வஞ்சக
நாவொன்று பேசப்

(31-ஆம் பக்கம் பார்க்க)

## வெறும் பூச்சியங்கள்

ஒன்று என்னும் இலக்கத்தோடு பூச்சியங்களைச் சேர்த்தால் அவைகளுக்கு மதிப்பு உண்டு. ஒன்றைவிட்டுப் பிரித்தால் அவைகள் வெறும் பூச்சியங்களே. இறைவன் ஒன்று என்னும் இலக்கமாவார்: உலகப்பொருள்ளெல்லாம் அவரோடு சேர்க்கப்பட்ட பூச்சியங்கள். தம்மளவில் அவைகளுக்கு மதிப்பில்லை.

—ஸ்ரீராமகிருஷ்ணர்.

## கோபிகாநாதன்

பராபக்தியில் பக்தன் பகவானைத் தனக்கு நெருங்கிய நண்பனாகக் கருதுகிறான். அது கண்ணபிரானிடம் கோபிகா ஸ்திரீகளுக்கு இருந்த பக்தி போன்றது. அவர்கள் அவரை எப்போதும் கோபிகாநாதன் என்று கருதியழைத்தனரே தவிர ஜகந்நாதன் என்று கருதி அழைத்ததில்லை.

—ஸ்ரீராமகிருஷ்ணர்.

## கோதண்டராமனா? துப்பாக்கிராமனா?

மணிப்பூர் மாநிலத்தில் ஆண்டுதோறும் விஜயதசமி அன்று இராவண வதம் நடத்தப்படுகிறது. அதில் ஒரு காலத்தில் வில்லையும் அம்பையும் பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள். கடந்த சில ஆண்டு காலமாக இராமனாக வேடம்பூண்டு இராவண வதம் புரியும் மணிப்பூர் மன்னர் மரபினர் அம்புக்குப் பதிலாக துப்பாக்கியைப் பயனபடுத்தி வருகிறார்கள்! ஆம்! இத்தேசத்தில் துப்பாக்கி மயமாக விளங்கும் வடகிழக்கு மாநிலங்களில் கோதண்ட ராமன் துப்பாக்கி ராமனாக மாறியதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது!

—டாக்டர். ந. சஞ்சீவி.

தகவல்: ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

# கருணைக்கடலாம் கந்தனும் காந்தனும்

"அன்பர்க்கு இன்பமாய் அருந்த யிழே
தந்து
துன்பம் துடைக்கும் ஜோதி
சொரூபன்
கண்ணென்று காக்கும் காருண்யன்
கந்தன்
விண்ணோரும் மண்ணோரும்
வியந்து போற்றும்
வீரமணி கண்டன்தான் போற்றுமுயர்
காந்தன்
வீரமொடு விவேகம் விளைவாக்கும்
அன்பன்
ஆனைமுகனின் சோதரராய் அவனி
தனில் அருள்நல்க
அவதாரம் இரண்டாம் அமைந்த
பணி ஒன்றே!"

உலகம் தோன்றிய காலம் உறுதியாய் சொல்ல யாரால் முடியும்? உலகத்தை உருவாக்கி, அதில் உயிரினம் பற்பலவும் தோற்றுவித்து, காத்து அருளும் கலையைத் திருவிளையாடலாகக் கொண்டு திருவருள் புரிவது இறைவனின் தனிக்கருணை. துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்து உண்மை மேலோங்க, சத்தியம் நிலைக்க, சமதர்மம் செழிக்க அற்புதங்கள் பல நிகழ்த்த அவதாரங்கள் மேற்கொள்வது அவனது கருணைக்கு உரிய காரியம். அவதாரம் என்பதே மேலிருந்து கீழே இறங்கி வருதல் என்பதுதானே. உயிர்கள் உயர்வடைய, ஆனந்தம் கொள்ள தன்னை ஆளாக்கிக் கொள்வதில் பரம்பொருளுக்கு பரமானந்தம்.



எட்டிக்குடி முருகன்

தாயாக அருள் பாலிக்கும் தன்மை அந்தப் பரம்பொருள் ஒன்றிற்கே உரியது. "பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து நீ பாவியேனுடை ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உவப்பிலா ஆனந்த ாய்" என்ற தொடரின் மூலம் ைறவன் கருணை-தாயின் அன்பு இரண்டையும் ஒப்பிடுவதோடு தாயாகத் தான் அமைந்து உவப்பிலா ஆனந்தம் நாம் பெறச் செய்து தானும் மகிழ்கின்றான். தாயினும் சாலப்பரிந்து அருள் பாலிக்கும் கருணை அப்பரம்பொருளன்றி வேறு யாருக்கு உண்டு?

திரு. வெ. சுந்தரம்,
பரமக்குடி.

அப்பரம் பொருள் பக்கத்திருந்தும் கூட பகுத்துணரும் தன்மை இல்லாதாருக்கும் பயன்தரு முறையில் நாடகமாடும் நிலை தோன்றுகிறது. இறைவன் திருவிளையாடலில் நலம் கண்டு அவன் தாளினைப் போற்றிப் பணிதல் பெரும் பேறறினைத்தரும் என்று உணர்த்தப்படுகின்றது.

அந்த ஆதிபரம்பொருளே சிவனாக, திருமாலாக தோற்றம் கொண்டதை உணராத ஒரு சிலர் சைவமென்றும், வைணவமென்றும் பிரித்து, தங்களுக்குள் பக்தியிலும் வழிபாட்டிலும் வேற்றுமை பாராட்டத் துவங்கியதைக்கண்டு பொறுக்க மாட்டாமல்

ஒற்றுமைக்கு வித்திடும் முகமாக திருமாலின்சோதரியை சுந்தரேசர் மணம் கொண்டு அன்பு மணம் பரப்ப அவதாரம் கொண்ட நிகழ்ச்சியாகும். ஆயினும் வேற்றுமை நீங்கவில்லை. சங்கர நாராயணராகக் காட்சி தந்தார். எனினும் பிரிவினைச் சங்கடங்கள் போகவில்லை. பெயரிலும் கூட ஒற்றுமை. சிவனடியார்கள். 'சுந்தரேசனே' என்று அழைக்க, வைணவர்கள் 'சுந்தரராஜப் பெருமாளே' என்று அழைப்பர்.

சிவனும் சுந்தரேசப் பெருமாள் வந்தி என்னும் மூதாட்டியின் பக்திக்கிரங்கி கூலியாளாக வந்து, வைகைப் பெருக்கைத் தடை செய்ய கரையுயர்த்தும் பணியில் மண் சுமந்ததும், அரிமர்த்தன பாண்டியனால் அடி பட்டான். அந்த அடியோ அரசன், அமைச்சர், மனைவியர், மகன், மக்கள், பட்டத்து யானை, குதிரை போன்று எல்லா உயிர்கள்மீதும் பட்டது. ஏன்?

பிட்டு உண்ட கூலியாளாக வந்த இறைவன் கூலியைப் பெற்றுக் கொண்டு வேலையில் குறை வைத்தால் கூலியாளாக வந்த இறைவன் அடி படுவது தானே முறை! இதைவிடுத்து பணிகளைப் பாங்குடன் செய்தோர் யாவரது முதுகிலும் அடி விழுந்தது முறையா?

இங்குதான் இறைவனின் திருவிளையாடலைத் தெளிவுற உணர வேண்டுவதாகும். வைகையில் வெள்ளம் கரை புரண்டோட, ஊருக்குள் புகுந்து நகரை அழிக்கும் அபாயம் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டி அரசன் தனது அமைச்சர்களை அழைத்து கரையுயர்த்தக் கூடிய பணிகள் செய்யப்பணித்தான். அமைச்சர்களும் அரசனைத் தொழுது சென்றனர். அமைச்சர்களின் கட்டளைக்கேற்ப வந்தி ஒருவள் மட்டுமே இறைவனைத் தொழுது வேண்டினள். தான் ஒரு கிழவி-தக்க துணை யாருமில்லை என மன்னனிடமோ, மற்றைய அதிகாரிகளிடமோ கூறியிருக்கலாம். தன்



ஸ்ரீ சுவாமி ஐயப்பன்.

பங்குக்குரிய கரையுயர்த்த வேறு யாரையேனும் கூலிக்குப் பணி செய்ய வேண்டியிருக்கலாம். மக்களைவிட, மன்னனைவிட, மகேசன்மீது கொண்ட பக்தியால் இறைவனிடமே தன் வேண்டுகோளை விடுத்தாள். ஆனால் மன்னன் முதல் மறையோர் யாவருமே தங்கள்மீதுள்ள நம்பிக்கையில் பணி மேற்கொணடனர். அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதை மறந்தனர். இது மட்டுமன்றி வந்தி தந்த பிட்டை இறைவன் உண்டது இவ்வுலகினர் யாவரும் உண்பதற்கு ஒப்பாகும். ஆகவே வந்திக்கு உதவ வந்த கூலியாளான இறைவன் பெற்ற அடி அனைவரும் பெறுதல் ஏற்றதாகும்.

தான் என்ற, தனது என்ற செருக்கை நீக்கி, இறையின் திருவருள் மூலமே இவ்வுலகு இயங்குகிறதென்ற உண்மையுணர்ந்த வந்திக்குக் காட்சி தரும இறைவன் அனைவருக்கும் அருள்பாலிக்க, யாவரும் உயர் ஞானம் பெற, நன்னெறி முறையில் நடந்திட, நலம் பல பெறவே இத்திருவிளையாடல் நடத்திக் காட்டினான்.

இம்மட்டோ! குழந்தையாய் இவ்வையத்தில் விளையாடிக்கு தூகலிக்கத் துணிந்தான். முக்கட் பரமன் தன் அம்சமாக நெற்றிக் கண்ணினின்றும் ஒளியை-"சுடரைத்"த் தந்தான். ஞானமெல்லாம் ஒன்றாகிய ஞானக் குழந்தையாக ஞாலம் விளங்கிட சோதிச் சுடராக ஆதிசிவ ஜோதி



ஸ்ரீ ஷண்முகர் — ராமகிரி.

யாக அவனியில் சரவணப் பொய்கையில் அவதாரம். ஆம் கந்தன் பிறந்ததோ சரவணப் பொய்கையில்.

பார்த்தனுக்குத் தேரோட்டிய கண்ணன் சிறையில் பிறந்து, யசோதை மடியில் தவழ்ந்து, பசுக்கூட்டம் காத்து, துவாரகையில் மன்னனக ஆட்சி செய்தான். மன்னனயினும், மாணவப்பருவ நட்பை மறவாது குசேலனகிய சுதாமனிடம் கருணை காட்டி அருள் பாலித்தான்-குழலிசையால் குவலயத்தைக் குதூகலிக்கச் செயத எளிவந்த பிரான் திருமால்.

மயர்வினைப் போக்கி மதி தன்னைப் பெருக்க மாயவன செய்த அவதாரமதில் மக்களின் நல்வாழ்வுக்குத் தந்த நீதிசாரம் கீதையென்னும் போத சாரம் தானே இவ்வுலகில் ஆதாரம். மக்கள் செயயும பணிகள யாவும், தன்மேல் பாரத்தைப் போட வேணடும் என்ற தத்துவத்தை உபதேசிப்பது கண்ணன் காட்டும் கீதையின் பாதை.

அரனகி, அரியாகி அன்பர் தம் உள்ளத்தமர்ந்த பரம்பொருள் ஒன்றே. அரன் வேறல்ல-அரிவேறல்ல. இதை உணர்ந்தால் தொல்லை ஏதுமில்லை. இக்கருத்தை மக்கள் உணரும் மூலமாகத்தான ஹரிஹரசுதனக அவதாரம் என்பது தெளிவாகும். அந்த ஹரிஹரசுதன் அவதார இடம் பம்பை நதித் தீரம்.

நீரின்றி அமையாஇவவுலகு, இறை நீதியின்றி இன்பமும் இல்லை இவ்வுலகில். எனவே கநதனும, காந்தனும் அவதார இடத்தின் ஒற்றுமையை உணரும்போது வேற்றுமைக்கு இடமேது. அவதார இடஙகளே ஒறறுமைக்குப பறை சாற்றும்.

சிவசக்தி சொரூபமாய் அவதாரம் சிங்காரவேலன்.

சிவவிஷ்ணு அமஸமாய் அவதரித்தான் ஐயப்பன.

சிவனின நெற்றிக் கண ஒளியில் தோற்றம கந்தன். மோஹினியான திருமாலின்மீது சிவனின் சுந்தரப் பார்வையில் தோற்றம் ஹரிஹரபுத்திரன். இரு அவதாரங்களுமே பார்வையெனும் சூட்சும ஜோதியில் தோற்றம். ஆனல் இச்சோதியோ தன்னெளி தரும் கருணை வெள்ளம் என்பதைக் காட்டும முகமாகத்தான் நீர் நிலையிலே தோற்றம்.

தாவரம், பறவை, விலங்கு போன்ற எல்லா உயிரினமும் தன் படைப்பு-தன்னுள் அடக்கம் என்ற தன்மையை உலகோர் உணர்ந்திடவே சிவன் காளை வாகனத்தையும், திருமால் கருட வாகனத்தையும் கொண்டனர். இதுபோல முருகன் வாகனமோ மயில். மணிகண்டன் வாகனமோ புலி.

“ஓம” எனும் பிரணவத்தின் உட்பொருளாய் ஐங்கரத்தான். அநத யானை வடிவினன் துணை கொண்டு வள்ளியை மணம முடித்தான் ஞான வேலன். மணிகண்டனே யானைக் கட்டத்தினுள்ளே ஞான ஒளியாக வந்தமர்ந்தான்! தந்தைக்குபதேசித்தான்; ஞான குருவானன் கந்தன். தாயின இடர் தீர்க்கத் தன் பணி

கொண்டு தான் யாரென உணர வைத்தான் காந்தன்.

ஆழ்ந்த, அகன்ற கூரிய அறிவே உயர் ஞானத்தின் தன்மை என உணர்த்த 'வேல்' தன்னைக் கைக் கொண்டான் கந்தன். வேலின் தன் மையை விளக்கும் கூரிய அம்ஸமான அம்பைக் கொணடு வில்லாதி வீரனுய் வீரமணி கண்டனுய் விளங்குவான் காந்தன்.

வில்லும், வேலும் வினை தீர்க்கும் ஞானக் கதிர்கள். வில்போல் வளைந்த புருவங்கட்கிடையில் பரந்த நெற்றி யின் மையமதில் கூர்மிகு நெற்றிக் கண் அமைந்த மையம் - ஞான முணர்த்துமிடம் என்று ஆன்ரோர் கூறும் அறிவைச் சுட்டும் ஆற்றல் மிக்க இடம். எனவே அந்த இடத் தில் திலகமிட்டுத் திறன் தன்னைக் கட்ட வேண்டும் என்பதை உணர்த்து முகமாகவே ஆனரோர் காட்டிய அற நெறி வழியில் திலகமிடல் தொன்று தொட்டு நடைமுறையில் உள்ள தாகும்.

திருச்செந்தில்நாதனே ஊமை யைப் பேசவும், பாடவும் வைத்து குமர குருபரனுக்கருள் பாலித்தான். தர்ம சாஸ்தாவோ குருநாதரின் மக னுக்குக் கண் ஒளி தந்து கருணை புரிந் தான். அனபு மனம் கொண்ட பக்தர் களுக்கு ஏற்பட்டத் துயரம் தரும் ஊனமதை நீக்கி நல் லருள் நல்கிய முறையிலும் இரண்டு அவதாரமும் ஒன்றுதானே!

காலமெல்லாம் தேவர்கட்கும் மாந்தர்க்கும் துன்பம் தநது வந்த அவுணர்கள தலைவன் சூரபத்மன். அச்சூரனை எதிர்ததுப் போரிட்டு ஆணவத்தை அழித்து அவனுடலை இருகூராக்கி ஒன்றைத் தன் மயில் வாகனமாகவும், மற்றொன்றை சேவற் கொடியாகவும் கொண்டான். தன்னை வணங்குவோர் தன் வாகனமாக வுள்ள ஆணவம் அழித்த மயில் வடி வில் உள்ள சூரனையும் வணங்கிட வைத்தான் கந்தவேள்.



கந்தகோட்டம் முருகர் கோயில் தேர்த்திருவிழா-சென்னை

கொடுரமிக்கக் கொள்ளையனுக வந்த வாபரையும் போரில் வெற்றி கொண்டு அடி பணிய வைத்து அன்பு நிறை உள்ள தோழனுக உடனிருக் கும் உண்மைத் தொண்டனுக அமையு மாறு செய்தான். தன்னை வணங்கும் அனைவரும் தனக்கு நிகராக வாப ரையும் வணங்குமாறு செய்து நமதுபோர்க்குணம்,பகைமைக்குணம் அழிய வழி காட்டினுன் வள்ளல் காந்தவேள்.

ஆணவம் அகற்றி அன்பால் இன் பம் பெற வழி காட்டும் முறையினில் அருள் பாலிக்கும் தன்மையில் கந்த னும் காந்தனும் ஒரே நிலையைத் தானே நிறுவியுள்ளார்கள். அன்புக்கு ஆட்பட்டு உயர்வினைப் பெறும வழி காட்டவே, இருவரும் அடிபணிந் தோருக்கு திருவடி நிழல் தந்து தம்மை உய்விக்க. நம் உள்ளத்தை இறைவன்பால் ஈர்க்க அமைத்தச் செயல்பாடுகள் ஒன்றேயன்றோ?

தந்தையுடன் வாதம் புரிந்து தனக் கென ஒரு தனி இடம் தேர்ந்து பழனி மலையில் தவக்கோலத்தில் நின்றவன் கந்தன். தாயின் துயர்போக்கப் புலிப்பால் கொணர்ந்துதர புலி மீதேறி, புலிக் கூட்டத்தையே கொணர்ந்து தந்தபின், தனக்கென

ஒரு தனியிடம் தேர்ந்து காந்தமலை மீதமர்ந்தவன் காந்தன். குன்று தோராடி வரும் குமரன் என்றால் குன்றுகள் பல சூழ்ந்த பகுதியில் குன்றேறி அமர்ந்தவன் தயாபரன.

குன்றினைத் தன் கொலுப்பீடமாகக் கொணட குறிஞ்சி நிலத்தலைவன்கந்தன், மற்ற நிலபரப்புக்களில் முலலை, மருதம், நெய்தல், பாலைப் பரப்புக்களில் வாழும் பக்தர்கட்கும் தித்திக்கும் தேனாகத் திகழ்ந்து நலமருள்வான். குன்றின்மீது காந்த மலைவாசனாகக் காட்சி தந்த போதும் மற்றைய நிலவாழ் பகதர் பல்லோருக்கும் பாங்குடன் அருள் பாலிக்கும் முகமாக ஊர்க் காவல தெய்வமாக ஐயனார் என்ற திருப்பெயரோடு காட்சி தருபவன் - கருணை பொழிபவன் காந்தன்.

மலை போன்று திடங்கொண்ட பக்தியினைச் செலுத்துபவர்கட்கு மலைமேல் தவழும் தென்றலென்க் குளுமையும், மலைத்தேன் சுவையென அருட்தேனையும் அளிப்பதில்இருவரது செயலும் இன்பம் நல்குவதல் ஒன்றே தான் அன்றோ? ஐவகை நிலத்தவர் கட்கும் அபயமளித்து ஐம்புலனிலும் ஐக்யமாகி ஆனந்தமளிப்பதில் ஆறுமுகனும் ஐயப்பனும் ஒன்றென்பதை உணரமுடிகினறதே!

இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்ற முச்சக்திகளில் தான் ஞான சக்தியாக நின்று மற்ற இரு சக்திகளாக வள்ளி, தெய்வானை வடிவில் இணைந்து அருள்வது முருகன் என்றால் ஞானசக்தி வடிவில் ஐயனாராக அமர்ந்து இச்சாசக்தி, கிரியா சக்தியாக விளங்கும் பூரணை, புஷ்கலையுடன் அருள் பாலிப்பவன் பூரண புஷ்கலநாதன்.

முருகனின் ஒராறு முகமும், ஈராறு கரமும் இணைந்து பதினெட்டாகும். சபரிகிரிநாதனை தரிசிக்க ஏறிச் செல்லும் படிக்கட்டுகள் பதினெட்டாகும்.

ஆண் பெண் இணைந்ததே இல் வாழ்க்கை. பிரம்மச்சர்யம், இல்லறம், வானப்பிரஸ்தம், சன்யாசம் என்பது நியதி. இம்முறையினை நம் முன்னோர்கள் மேற்கொண்டது புராண வரலாறுகள் உணர்த்தும். மாமுனிவர்கள் மனைவியருடன் வாழ்ந்த வாழ்க்கையை புராணங்கள் மூலம் அறிய முடிகிறது. ஆணும் பெண்ணும் சரி நிகர் என்ற தத்துவத்தைக் காட்டுவதே அர்த்த நாரீஸ்வரர் சொரூபம். சிவசக்தி வழிபாடு லெட்சுமிநாராயண வழிபாடுகள் ஏற்பட்டமுறையும் இதை உணர்த்து தற்கேயாகும்.

இறைவனைத் தீண்டி பூஜை செய்ய திருமணமானவர்கட்கே உரிமையுண்டு என்ற காரணத்தால், கோவிலில் இறைவனை பூஜிக்கத்தக்க பூஜா விதிகள்-மந்திரங்கள் அறிந்திருந்தும் திருமணமாகாத முறையில் ஏழை தருமி வருந்துகிறான். அவன் மிக்க ஏழையான காரணத்தால் திருமணம் செய்து கொள்ள பெண்ணுக்கு உரிய பரிசப்பணம் கொடுக்கவும் வழியில்லையே என்பதால் இறைவனை மனத்தில் இருத்தி இறையுருவை பூஜிக்க அருள் பாலிக்க வேண்டுமென ஏங்கி இறைஞ்சுகிறான்.

பக்திக்கு இரங்கிய இறைவன் சொக்கநாதன் பாடல்தந்து, பாண்டியனின சந்தேக நிவர்த்திக்கு உரிய தாக்கி மன்னனின் பரிசைப் பெற்றுக கொள்ளச் சொல்கிறான். ஆனால் பாடலில் பொருட் குற்றம் உள்ளதென்று நக்கீரர் தடுக்க இறைவனே நேரில் வந்து வாதிட்டு நக்கீரனின் அகம் பாவத்தை அடக்கி தருமிக்கு பொற்கிழிக்கிடைக்கச் செயகினறான சுந்தரேசன். இதிலிருந்து பகதிக்கு இரங்கலும், ஆணவத்தை அடக்கலும் இறைவன் செயல் எனபதோடு, பெண்ணோடு பொன்னும் பொருளும் வரனுக்கு அளிப்பது அக்கால வழக்கமில்லை என்பதும், பெண்ணுக்கே மணமகன் பொருள் கொடுத்து மணந்ததும் தெரிய முடிகின்றது. மற்றும் இறையுருவைத் தீண்டி, வழிபாடுகள் கோயிலில் நிகழ்நது வநதனஎன்பதையும் உணர முடியும்.

கண் இரண்டு. செவியிரண்டு, நாசியிரண்டு, கைகள் இரண்டு, கால்கள் இரண்டு ஆக ஒருவருக்கு பல உறுப்புக்கள்இரண்டிணடாயினும் வாய்ஒன்றே. அந்த வாய் இறை நாமத்தைச் சொல்லவும் நல்லதையே பேசவும் அமைக்கப்பட்டது. அதுபோல இதயம் ஒன்றே. இதயத்தில் இறைவன் ஒருவனே இதயகமல வாசனாக இருக்க வேண்டும்.

கண்கள், செவிகள், நாசித்து வாரங்கள், வாய், கால்கள், கைகள், உடல், மனம, அறிவு ஆகிய ஒன்பதும் ஒருவருக்கு நல்லன பயக்கவே அமைந்தன.

ஒரு மனிதருக்கு முக்கியமானவை நவத்துவாரங்கள். ஆண் பெண் இருவருக்கும் பதினெட்டாக அமையும். அவற்றின் இச்சைக்கு மனம் செல்லாது நன்மனம் கொணடு இறையின்பம் பெற ஒவ்வொன்றையும் கட்டுப்படுத்தி அடக்கினாலே இதய கமலத்தில் இறைவனின் ஜோதி இன்பம் பயக்கும் நிலையில் நிலையாக அமைந்திருக்கும். ஆசை, அசூயை, வெகுளி, இன்னாச் சொல் போனற தீயன ஒவ்வொன்றாக வெற்றி கொண்டு படிப்படியாக உயர்வடைய வேண்டும் என்ற கருத்தையும் ஆன்றோர் கூறுவர். உடல் உறுப்புக்களின் கட்டுப்பாடே உயர்வுக்கான படிக் கட்டுகள் என்பதை விளக்கவே பதினெட்டுப் படிகளாகக கொள்வதில் தவறேது?

பாரதப் போர் பதினெட்டு நாட்கள் நடநதது. பதினெட்டாம் நாளில் கீதையின நீதி நிறைவாக்கப்படுகிறது. குருக்ஷேத்திரப் போர் என்பதை நம் மனத்தில் ஏற்படும் ஆசாபாசங்களால் ஏற்படும் போர் என்றும் கொள்ளலாம்.

கண்ணனின மற்றோர் அவதாரமே மோஹினி என்பதாகும். மோஹினி

அவதார காலத தோற்றமே மணிகண டன். கண்ணன் உபதேசித்து கீதை யின் பதினெட்டு அதயாயமும் உணர்நது அதன் வழி நடந்தால் உயர்வான இறையருள் கிட்டும் என வும் உணர்த்தப்படும். அதாவது கண் ணனின் அம்ஸமான காந்தன் அருள் பெற கீதை வழியால் படித்துணர்ந்து நிற்க வேணடும் என்பதை உணர்த் தும்.

மஹா பாரதப்போர் 18 நாட்கள். இதில் கண்ணன் சூத்ரதாரி. இது போல கந்தவேள் சூரனுடன் போர் பதினெட்டு நாட்கள். முடிவில் இறை யின் கருணை.

இறைவனுக்குத் தேங்காய், பழம் நிவேதனம். ஆசாபாசம் நாராகப் பின்னியுள்ளது தேங்காய் நார் போல. அதை நீக்கி விட்டால் கடின ஓடு. அது நம் மனம் கொள்ளும் மாயை. ஆசாபாச நாரும், மாயை என்ற ஓடும் நீக்கக் கிடைப்பது தேங்காய்' இனிக் துன்பத்தில் நீ 'தேங்காய்'என கூறுவது போல அமைநதது. உடன் இருக்கும் கனி போல இறைவன் கனிந்தருள் புரிவான். தேங்காய் முக்கண் வடிவமானது. சிவனின் முக்கண்ணை நினைவூட்டும் ஒரு கண் வழியே உள்ளிருககும் நீரை வெளி யேறறி அதனுள் பசும நெய் நிரப்பப் படும.

கண்ணனுக்குகந்த பணடம் வெண் ணெய். பசுக் கூட்டம் மேய்த்துக் காத்தவன கணணன். பக்தர்களாகிய பசுக்களைக் காத்தவன் கண்ணன். பதப்பட்ட மனம் போல பதத்தி லிருந்து உருக்கிய நெய இருமுடித தேங்காயின் கண் வழியே நிரப்படு கிறது. எளிதில் உருகும் பதமென கண்ணன் இதயமெனபதைக்காட்டும.

சிவவடிவமான தேங்காயுள், பத மென பக்தர்கட்கு இதந்தரும் நெய் யெனத் திருமால் வடிவத்தின் குணத்தை அமைத்து அரன அரி ஒன்றெனத் தலைமீது இருமுடி தாங்கிச் செல்வது உயர் கருத்தை வெளிப்படுத்துவதாம்.

சாஸ்தாவின சன்னிதானம் செனறு அங்கு இருமுடியில் உள்ள நெய் காயை உடைததால உள்ளே நெய் கெட்டிபட்டுள்ளது. இதன் காரணம் யாது? பக்தர்களின் அன்பிற்கு உரு கிய இறைவன் பக்தர் மனத்தில் கெட் டிப்பட்டிருப்பான் என்பதுதானே!

இறைவன் குடிகொண்ட இடத்தில் கடினமானவை இருக்கலாகாது. அவையும் உருக வேண்டாமா? எனவே ஓட்டுடன கூடிய தேங்காய் உருகு மாறு அக்னி குணடத்தில் ஜோதிச் சுடருடன் இணைக்கப்படுகிறது.

ஜோதி வடிவான இறைவனைக் காண தீயதைச் சுட்டெரித்து மனம் உருக வேணடும். பக்தி கனிய வேண டும். பசும் நெய்யில் அபிஷேகம செய்த பிரசாதமாகிய நெய்யுடன் நிர்மலமான நெஞ்சுடன், இதயத்தில் இறையின்ப ஜோதியை ஏற்றி அருள் பெற்ற ஆனந்தமுடன் இல்லறம் நடத்த பக்தர் திரும்புவர்.

ஜோதி நாயகனின் அம்ஸமான கந் தனும் காந்தனும் பக்தர்கட்கு தன் ணொளி பரப்பவே அமைந்தனர். எனவே தணமைதரும்பொருள்களால் அபிஷேகம் இருவருக்கும பால், பன் னீர், சந்தனம், பஞ்சாமிர்தம் போன் றவை அபிஷேகம செய்தும், நமககு தணணொளி தரும் தெய்வங்களை இன்பமுறச் செய்து மகிழ்கின்றோம்.

பன்னீரின் குளுமை, சந்தனத்தின் மணம, இளநீரின் இனிமை, பாலின தூய்மை, பஞ்சாமிர்த சக்தி ஆகிய யாவும இறைவன் பக்தாகட்குக் கொடுப்பதை விளக்க வேண்டிய இவ் வபிஷேகங்களை அமைத்தனர்

இருவரும அணிகலனகளால் அலங கரிக்கப்பட்டு புஷ்பங்கள் மூலம பூஜிக்கபபடுகிறார்கள். திருக்கார்த் திகை தீப ஒளியாகக் கந்தன் தரி சனம். மகர ஜோதியாக காந்தன் தரிசனம். உத்திராடத்தில் அவ தாரம் - உகந்தேற்றது மலைவாசம். அங்கு நிறைந்தது மூலிகை வாசம். அம் மலைகள் மீது செல்பவர்க்கோ தீரும் நோயின் சகவாசம். மாந்தர் உடல்நலம் பேண கந்தனும் காந்த னும் ஒனறெனக்காட்டுவதோ தாயின் பாசம். இருவரின் தன்மையும் ஒன் றென உருவகப்படுத்தும் செயல் நேசம். இதனால் நமது வாய் அவர் களது திருநாமமே பேசும்.

அவதாரம் இரண்டிலும் சாதிபேத மில்லாத சமத்துவமே போதிக்கும். சங்கடங்கள்தனைப் போக்கும். சந் தோஷம்தன்னையே தேக்கும். அறிவு ஆற்றல், பாசம், தூய்மை, தொண்டு அன்பு, பண்பு ஆகியவை உருவாக் கும்.

முருகனுக்குக் காவடி - மணிகண்ட னுக்கு இருமுடி-முருகனுக்குத் தத்தம் தலை முடியினைக் காணிக்கையாக்கி ஞானமுடி ஏந்தி வருவர்.

இவ்வாறு பற்பல ஒற்றுமைகளா கப் பகரலாம். இருப்பினும் உடன் பாடான ஒரு சில சிந்தனைக்குக் கொண்டு சென்ற வகையில் கருணை யின் வடிவம் கந்தனும் காந்தனும் என்பது தெள்ளதின் விளங்கும். இறைவன் ஒன்றே! இறைவழிபாடு நன்றே! இறையருள் பேதம் காணல் தீதே! இறைவனை இதயத் தாமரை யில் என்றும வீற்றிருக்கச் செய்ய வேண்டும். அன்பு ஒன்றே அவ்விறை வன் விரும்புவது! அன்பை ஆருயிர் அனைத்திலும் செலுத்த வேண்டும். இன்பம் தானே வந்துவிடும். இக் கருத்தை வலியுறுத்தவே கந்தனும், காந்தனும் வந்தவதாரம் நிகழ்த்தி யுள்ளனர் என்பது சிந்தையில் கொள் வதே சீரிய வழியாகும்.

எல்லா உயிர்களும் இன்புறவேண்டி இறைவன் தாளினை என்றும் பணி வோம்.

" ஆனை முகனின் தம்பியராம்
மணிகண்டன் முருகனும்
ஆற்றல்தனைத் தருபவராம்
அன்பதனில உறைபவராம
கநதா என்று அழைத்தாலும்
கனிந்தருளே புரிந்திடுவாய்
காந்தா என்றே அழைத்தாலும்
கனிப்போடு அருள்வானே!

★

# நவக்கிரகங்களும் க்ஷேத்திரங்களும்

திரு. V. பத்மநாபன,
ஈரோடு.

நவக்கிரஹங்கள் இந்திராதிதேவர்களையும் ஆட்டிவைககும் சக்திவாய்ந்தவை. உலகம் முழுவதும் ஜாதி, மத, இன, நெறி, மொழி வேறுபாடின்றி, மனிதனுடைய ஒவ்வொரு செயலும் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது ஆகிய நவக்கிரஹங்களின் ஆட்சிக்கு உட்பட்டே நடைபெறுகின்றன.

இயற்கையின் நியதிப்படி மனிதன் முன் ஜன்மத்தில் செய்த புண்ணியத்தையும், பாவத்தையும் அனுபவிப்பதற்காகவே மறுபடியும் ஜன்மம் எடுக்கிறுன். முன் ஜன்மங்களில் செய்த வினையைஅனுசரித்து அதற்குத்தகுந்த பலன்களை மனிதனுக்கு நவக்கிரஹங்கள் அளித்து வருகிறது. நம் அன்றுட வாழ்க்கையில் நம்முடன் நவக்கிரஹங்கள் ஒன்றியிருக்கின்றன. ஒவ்வொரு மனிதனுக்கும் வாழ்க்கையில் சுகமும் துக்கமும் அவன் முற்பிறப்பில் செய்த கருமங்களை அனுசரித்து அளிக்கிறது. பூர்வஜென்மத்தில் பாவம் செய்ததினுல் இந்த ஜன்மத்தில் கஷ்டப்படும் மனிதன் திருவேங்கடத்தில் திருமலையில் கோயில் கொண்டிருக்கும் வெங்கடாசலபதியை சரணடைந்தால் நவக்கிரஹங்கள் யாதொரு கெடுதியும்செய்யாமல் ஸகலநன்மைகளையும் செய்கின்றன.

> "கல்லாப் பிழையும கருதாபபிழையும் கசிந்துருகி
> நில்லாப் பிழையும் நினையாப்பிழையும் நின்னைந்தெழுத்தைச
> சொல்லாப் பிழையும துதியாப்பிழையும் தொழாப்பிழையும்
> எல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய்"

என்று பட்டினத்தார் நெஞ்சம் உருகப் பாடியதுபோல் இறைவனை மன்ருடிக் கேட்டுக் கொண்டால் இறைவன் அந்தக் கஷ்டங்களையெல்லாம் குறைத்து அருள்புரிவான் என்பதற்கு எத்தனையோ வரலாறுகள் இருக்கின்றன.

நவக்கிரஹங்களை பூஜித்து வணங்கி நவக்கிரஹ காயத்ரியையும் பாராயணம் செய்து வணங்கி வந்தால் நவக்கிரஹஙகளினுல் ஏற்படும் கஷ்டங்களிலிருந்து விமோசனம் உண்டாகி அவர்கள் சகல க்ஷேமங்களையும் அடைவார்கள்.

தசாவதார ஸ்தோத்திரத்தையும் நவக்கிரஹ ஸ்தோத்திரங்களையும் பாராயணம் செய்பவர்களுக்கு இன்னல்கள்நீங்கிமேன்மேலும்நன்மையே உண்டாகும் என்பது உறுதி.

ஞாயிற்றுக்கிழமை தோறும் சூரிய பகவானை துதித்தால் சகல பாககியங்களும் உண்டாகும்.

திங்கட்கிழமைகளில் சந்திரபகவானைத் துதித்தால் தடங்கல்யாவும் நீங்கி வாழ்வில் முன்னேறறமுண்டாகும்.

செவவாய்க் கிழமைகளில் செவ்வாய்கிரஹத்திற்குரிய அங்காரகனைத் துதித்தால் சத்ருக்களை ஜெயிக்கலாம்.

புதனகிழமைகளில் புத பகவானை துதித்தால் ஸகல சாஸ்திர ஞானமும் கைகூடும்.

வியாழக்கிழமைகளில் குரு பகவானைத் துதித்தால் ஸகல சம்பத்தும் பெருகி ஸகல வித்தையும் உண்டாகும்.

வெள்ளிக்கிழமைகளில் சுக்கிரபகவானைத் துதித்து வந்தால் விவாஹ ப்ராப்தி, சௌபாக்கியம், மலட்டு நீக்கம் ஆகிய பலன்கள் உண்டாகும்.

சனிக்கிழமைகளில் சனீஸ்வர பகவானையும் கேதுபகவானையும் துதித்தால் வியாதி, கடன், பேய், பிசாசு போன்றவற்ருல் உண்டாகும் ஆபத்துகள் நீங்கும். தரித்திரம் நீங்கும். பீடைகள் நிவர்த்தியாகும்.

நவக்கிரஹங்கள் நம்நாட்டில் கீழ் கூறப்பட்டிருக்கும் எட்டு முக்கிய க்ஷேத்திரங்களில் மூலஸ்தான மூர்த்திகளுடன சேர்த்தே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. அந்தந்த கிரஹங்கள் குடிகொணடிருக்கும க்ஷேததிரங்களுக்கு சென்று அந்த கிரஹங்களை வணங்கி வந்தால் ரொம்பவும் நல்லது. ஆகவே அநதந்த குறிப்பிட்ட கிரஹங்களினுல் குறிப்பிட்ட காலத்திற்கு ஏற்படக்கூடிய தீயபலன்களிலிருந்து மனிதன தன்னைக்காத்துக் கொள்ளவும் அந்த தீய பலன்களினுல் ஏற்படக்கூடிய இன்னல்களிலிருந்து விடுபடவும் நவக்கிரஹங்களை வழிபட வேண்டும.

## நம் நாட்டிலுள்ள நவக்கிரஹ க்ஷேத்திரங்கள்

| | கிரஹம் | க்ஷேத்திரம் | மூலஸதான மூர்த்தி |
|---|---|---|---|
| 1. | சூரியன் | சூரியனுர் கோயில் (ஆடுதுறை அருகில்) | ஸ்ரீ சிவசூரிய நாராயண ஸ்வாமி |
| 2. | சந்திரன | திருப்பதி | ஸ்ரீ வேங்கடாசலபதி |
| 3. | செவ்வாய் | பழனி | ஸ்ரீ தண்டாயுதபாணி |
| 4. | புதன் | மதுரை | ஸ்ரீ சுந்தரேஸ்வரர் |
| 5. | குரு | திருச்செந்தூர் | ஸ்ரீ பாலசுப்பிரமணியம் |
| 6. | சுக்கிரன் | ஸ்ரீரங்கம் | ஸ்ரீ ரங்கநாதர் |
| 7. | சனி | திருநள்ளாறு | ஸ்ரீ தர்ப்பாரணியேஸ்வரர் |
| 8. | ராகு, கேது | ஸ்ரீகாளஹஸ்தி | ஸ்ரீ காளஹஸ்தீசுவரர். |

மேற் குறிப்பிட்ட க்ஷேத்திரங்களுக்கு அந்தந்த கிரஹங்களுக்குரிய நாட்களில் சென்று அந்தந்த கிரஹங்களை பூஜித்து வணங்கினுல் சகல நன்மைகளும் உண்டாகும்.

(23-ஆம் பக்கத் தொடர்ச்சி)

புலால் கமழு மெய்யொன்று சாரச்
செவியொன்று கேட்க
விருமபியான் செய்கின்ற பூசை
யெவ்வாறு கொள்வாய்
வினை தீர்த்தவனே''

என்ற பட்டினத்தார் பாடல் மேற் கண்ட உண்மையினை உணர்த்தும்.

**வழிபாட்டின் வளர்ச்சிநிலை :**

உருவ வழிபாடும, கோயில் வழி பாடும் இறையுணர்வை ஊட்டவே ஏற்பட்டவைகளாகும். இவையே நிரந்தரமானவை அல்ல. 'விக்கிர காராதனை' வீடுகட்டுவதற்குச சாரம் போடுவது போலாம. வீடு கட்டும வேலைமுடிந்தவுடன சாரம் அப்புறப் படுத்தப்படும். அதனை அப்புறப்படுத தாமல் முடியாது. அதனால் சாரம் வீட்டுவேலைக்கு அவசியமில்லை என் பது அறிவுடைமையாகாது. அவ் விதமே மன ஒருமையும், இறைவனை எங்கும் காணும் தன்மையும் எய்தப்



தாணுமாலய சுவாமி கோயில்
—சுசிந்திரம்

பெறும் போது விக்கிரகாராதனை தானே விலகிவிடும். விக்கிரகாரா தனை முக்திநெறியில் ஒருவழியேயன்றி அதுவே மனிதர்க்குக் குறிக்கோளல்ல என்ற ஆனறோர் கருத்து இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. கோயில் வழி பாட்டிலிருந்து பக்குவநிலை வளர்ச்சிய டைதலைத் திருமூலர் பினவருமாறு குறிப்பிடுவார்.

"நாடு நகரமும் நற்றிருக் கோயிலும
தேடித் திரிந்து சிவபெருமான என்று
பாடுமின் பாடிப் பணிமின்பணிந்தபின
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக்
கொளவனே''

இவ்வாறு கோயில்களுக்குச் சென்று வழிபடுதலின மூலம் "உள்ளமே கோயில்'' என்ற பக்குவ நிலை ஏற் படும.

இராமலிங்க அடிகளின வாழ்க்கை யைப் பார்க்கும் பொழுதும் இவ் வுண்மை புலப்படும். முதலில் அறு முகனையும், நடராசரையும் பாடிப் பரவிய பின் சமயக் காழ்ப்புணர்ச்சி களை நீக்கும் பொருட்டு இறைவனை ஜோதி (ஒளி) வடிவிலேயே வாழ்த்தி வணங்கியமையை மனம் கொளல் வேண்டும்.

**வழிபடுவோரின் மனநிலை :**

கோயில்களுக்குச் சென்று வழிபடு வோர் ஏதோ நம் முன்னோர்கள் செய் தார்கள் நாமும் அவ்வண்ணமே செய் வோம் எனற எண்ணத்தில் செயதல் கூடாது. உண்மை உணர்வோடு வழிபாடு நடைபெற வேண்டும். அப் பொழுதுதான் அங்கே அறியாமை நீங்கும். அழகின்பம் தோன்றும். உண்மை உணர்வில்லாமல் செய்யும் வழிபாடு வெறும் கல், செம்பு வழி பாடாகவே முடியும.

**முடிவுரை :**

கடவுளை அறிநதவர், வழிபடுபவர் எவ்வாறு திகழ்தல் வேண்டும் என் பதை நாமக்கல் கவிஞர் தம் கவிதை யில் பின்வருமாறு குறிப்பிடுவார்.

அவரே கடவுளை அறிந்தவ ராவார்
அனைவரும் மதித்திடத் தகுந்தவ
ராவார்
துனபப் படுவோர் துயரம் சகியார்
துடி துடித்தோடி துணைசெயப்
புகுவார்
இன்பம் தனக்கென எதையும்
வேண்டார்
யாவரும் சுகபபட சேவைகள பூண்டார்
......(அவரே)
பசியால் வாடின எவரையும பார்த்து
பட்டினி தமக்கென பரிதவித் தார்த்து
விசையாய் முடிந்ததை விருப்புடன்
கொடுப்பார்
வீண் உபசாரம் விளம்புதல் விடுப்பார்
......(அவரே)
நோயால் வருந்திடும் யாரையும் கண்டு
நோன் பெனச் செய்வார் எல்லாத்
தொண்டும்
தாயாம் எனவே தன் சுகம் எதையும்
தளளிவைத் தருகினில் தானிருந்
துதவும்......(அவரே)

இக்கருத்தின் உண்மையை உணர்ந்து இறைவனை வணங்குபவர் கள் செயல்படவேண்டும். அப்பொ ழுதுதான் ஆழ்வார்களும், நாயன் மார்களும் ஊட்டி வளர்த்த ஆன் மீகக் குழந்தை நன்முறையில் வளர்ந்து பார் போற்ற வாழும். நாமும் ஆன்மீக வளர்ச்சிக்கு உறு துணையாக இருப்போமாக.



ஓம் ஸ்ரீ மாத்ரே நம :





# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய சாதனங்கள்.**

| வ.எண். | யந்திரங்களின பெயரும் அதன் பலனகளும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூர்ண ஸ்ரீ சககர மகாமேரு பஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது (மர பீடம் உட்பட) $6\frac{1}{4}\times6\frac{1}{4}$ செ. மீ. ரூ. 750/- 5×5 செ. மீ. | 450-00 |
| 2. | ஸ்ரீ மகா கணபதி 8×8 செ. மீ. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130-00 |
| 3. | ஸ்ரீ சக்கரம் 8×8செ.மீ. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது | 130-00 |
| 4. | ஸ்ரீ மகாலட்சுமி மகாயந்திரம் 24×24 செ. மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமி கடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1150-00 |
| 5. | சர்வ ஜன மன தன ஆகாஷணம் ஸ்ரீ சாம்ராஜ்யலட்சுமி ஸ்ரீ மகா சுதர்சனம் 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யநதிரங்கள் சேர்த்து வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமி கடாட்சம், பண வரவுககும்,எதிரிகள் பொருமை இவைகளை நீக்கி சுபிட்சத்தை உண்டுபண்ணும் | 1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம சாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீ சுதர்சனம் 8×24 செ. மீ. (கோல்டு பிரேம்) | 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா, 16×48 செ. மீ. (கோல்டு பிரேம்) மூன்று யந்திரங்கள் சோநது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீககி எதிரிகள் இல்லாமல் செய்யவும பில்லி, சூனியம், ஏவல்களை நீக்கி, லட்சுமி கடாட்சம் தரவல்லது. | 1750-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரதியங்காரா 8×24 செ.மீ.(கோல்டுபிரேம்)மேற்கண்டபலனைத் தரவல்லது | 500-00 |
| 9. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ. 500/- இது மனதை ஒரு நிலைபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 10. | கண் திருஷ்டி ஒருபுறம். மறுபுறம் சுதர்சன டாலர். கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது. | 70-00 |
| 11. | ஸ்ரீ சக்கரம் ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீ காமாட்சி டாலர். அம்பாள் கடாட்சத்தை ஏற்படுத்திச் சிரமங்களை நீக்க வல்லது. | 70-00 |
| 12. | ஸ்ரீ காமட்சி ஒருபுறம், மறுபுறம் தனகர்ஷண டாலர். அம்பாள் கடாட்சமும், பொருள் வரவும் தரவல்லது. | 70-00 |
| 13. | சௌடாமபிகை மாங்கல்ய பாக்கிய டாலர். அம்பாள் கடாட்சமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்கவும் வல்லது. | 70-00 |
| 14. | விவாகப்ராப்தி டாலர். தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும் | 70-00 |
| 15. | ஸ்ரீ சக்கரம் லட்சுமி பீஜம் டாலர் அம்பாள கடாட்சத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | 70-00 |
| 16. | கண் திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களைத் தடுத்துக காப்பாற்ற வலலது | 70-00 |
| 17. | தத்தாத்ரேயர் யந்தரம் 12×12 செ. மீ. (கோல்டு பிரேம்) கண திருஷ்டி, பொருமை, துர்தேவதைகளால் ஏற்படும தொல்லைகளை நீக்கிக காப்பாற்ற வலலது | 150-00 |
| 18. | தத்தாத்ரேயர், விக்ன கணபதி, ம்ருத்யுஞ்ஜய (சாவ ஜெய யநத்ரம்) 8×24 செ.மீ. இந்த மூனறு யநதிரங்கள் சேர்தது ஆகாயத்தில் செல்லும் விமானம முதல் லாரி கார் வரை கண் திருஷ்டியால் ஏற்படும் விபத்தைத் தவிர்ககவல்லது. | 500-00 |
| 19. | இனனும் பலவிதமான டாலர்கள், மாலைகள் அனைத்தும சுத்த வெள்ளியால் செய்யப்பட்டன. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்தரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ. 105/- ஸ்பெஷல்: கோவிலில் ஜன ஆகர்ஷணம், தன ஆகர்ஷணம் செய்யக்கூடிய யந்தரத்தில் விலை ரூ. 300/- வெளிநாட்டுக்கு 25% அதிகம. விலைபபட்டியலுக்கு 0-50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட விலாசத்திற்கு விணணப்பிககவும. மேற்கண்ட யந்திரங்களின் பலன்களை ஓரளவுதான பத்திரிகைகளில் தெரிவிக்க முடியும்.

ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர், தலைவர் நவசகதி நிலையம்,
153, லாயட்ஸ் ரோடு, (ஸடேட் பேங்க் எதிரில்), கோபாலபுரம், சென்னை - 600086.

**போன் : கடை ... 472013 மா மேரு டிரஸ்டு வீடு: ... 861254**

**" லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து "**

சிறுவர் பகுதி

# மரம் சொல்லிய உண்மை

தம்பி! தம்பி!......யாரோ கூப்பிடும் குரல் கேட்கிறது.

யாரது.........

நான்தான முருங்கை மரம்.

முருங்கை மரமா!...என்நினைவுகள் என்னை எங்கெங்கேயோ இழுத்துக் கொண்டு போகின்றன.

கிராமததிலிருந்து எங்கள் தாத்தா ஒரு முருங்கைப் போத்துக் கொண்டு வந்தார். அப்போது நாங்கள் பட்டணத்தில் தெற்குத் தெருவில் குடியிருந்தோம். தோட்டத்தில் கிழக்கு மூலையில் ஆழக் குழி தோண்டி அதனை நட்டார். சுற்றிலும் மண் போட்டு நன்றாகக் காலாலும் கையாலும அமுக்கிவிட்டுப் பாத்தி கட்டித் தண்ணீர் ஊற்றினர். வெட்டுப்பட்டிருந்த மேல் முனையில் எங்கள் மயிலைப் பசு போட்ட சாணியை எடுத்து அபபி வெட்டு முகம் தெரியாமல் மூடினா. நான் பக்கத்திலேயே இருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

'என்னடா பாக்குறெ, நம்ம ஊரு முருங்கைமரம, நம்ப தோட்டததுலே பெரிசு பெரிசா காய்க்குமுலே அநத மரம்'.

'ஏன் தாத்தா! அபபடின்னு...... அந்த மரத்தை இஙகே எடுத்துக்கிட்டு வந்துட்டியா? இனிமே அந்த மரம காய்க்காதா?'

'அந்த மரம் அங்கேயும் காய்க்கும்—இது அதனுடைய கெளெ. ஒரு கெளெ இங்கே நட்டுவச்சா இங்கேயும் காய்க்கும. ஒனக்குத் தெரியுமா? என் தாததா கொழும்புச் சீமையிலிருந்து கொண்டாந்து கிராமத்து நம்ப வீட்டிலே வச்ச மரம் இது. நம்ம ஊர்லெ இருக்கிற மரம் எல்லாம அதன் கெளெயிலிருந்து கௌச்சி, கௌச்சி வளர்ந்தவைதான'

'அப்படியா! இது எப்போ காய்க்கும்?'

'டேய். இது ஆடி மாசம, கணக்குப்பாரு. ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி. ஆம வைகாசி மாசத்திலே அதாவது இன்னும் பத்து மாசத்திலே காய்ச்சிடும்.

'அப்படினனு...எபப மொளைக்கும் தாத்தா?

'இன்னும் ஏழெட்டு நாளுக்குள்ளே துளிர் விடுண்டா. நீயே பாரேன்...' என்று சொல்லி அவர் ஊருக்குப் போய்விட்டார்.

நான் நாள்தோறும் பொழுது விடிந்தவுடன் ஓடிப்போய் முருங்கைப் போத்தைப் பார்ப்பேன். நான் கைந்து நாட்கள் ஒன்றும் தெரியவில்லை. ஐந்தாவது நாள் அதன் கணு ஒன்றில் வெளிபச்சைத் துளிர் ஒன்று மெல்ல எட்டிப் பார்த்தது. அந்தத் துளிரைத் சுற்றித் தொட்டுப் பார்த்தேன். முருஙகைப்போத்தைத் தடவித் தடவிப்பார்த்தேன். எனக்கு வேடிக்கையாகவும் விநோதமாகவும் இருநதது. இபபடியே ஒவ்வொரு நாளும் முருங்கைப் போத்தின் ஒவ்வொரு பககத்தில் ஒரு புதுத்தளிர் ஒனறு பட்டையின உளளிருநது மெல்லத் தலைகாட்டும் எங்கள் மயிலைப் பசுகன்றுபோட்டபோது பசு வயிற்றிலிருந்து கன்றுகுட்டி தலைகாட்டியது போல அந்தத்துளிரும் பட்டையிலிருநது வெளியே வரும். பழைய துளிர்கள் தளிர்களாக நீணடு, காம்புகளாகப் பெருகி கிளைகளாக வளரத் தொடங்கிவிட்டன. ஆனால் நாள் தோறும் அந்த முருங்கை மரம் ஏதோ எனக்கொரு புதுவிதமாகத் தோன்றியது.

சில நாட்கள் முருங்கை மரத்தைப் பார்க்க முடியாமல் போய்விட்டது. எங்கள ஊரிலிருந்து 'தாத்தாவிற்குச் சுகம் இல்லை. உடனே வரச்சொன னுங்கன்னு' ஆள் வநதான். உடனே அம்மா 'அபபா அப்பா'ன்னு அழத் தொடங்கினுங்க. அப்பா கண்ணிலும் கணணீர் முட்டிக்கொண்டு வந்தது. நான கவலையோடு ரெண்டு பேர் மூஞ்சையும பார்த்தேன். ஏன் அழறுஙகன்னு எனக்குத தெரியலெ. எனக்குக் கூட நாலைந்து நாட்களுக்கு முன்னே ஒடமபு சுகம் இல்லை. டாக்டர் மருநது கொடுத்தார். அப்பாவும் அழலை; அம்மாவும் அழலை; எல்லோரும் கிராமத்துக்குப் போனோம். அங்கே தாத்தா பேசாம படுத்துக்கெடந்தார். 'முருஙகைமரம் கௌ, கௌயாவளர்நதிடுச்சிதாத்தா' ன்னுசொல்லகிட்டபோனே. ஆனு தாத்தா கண விழிக்கலெ பேசலெ. அபபுறம் தாததவை எங்கேயோ தூக்கிட்டுப போனுங்க. மணணுக்குள்ளே போட்டுப்புதைசசிட்டாங்க. தாத்தா மொளச்சி வருவார்னு நினைசசேன். அஙகே யோய்ப்பார்ககணும்னு ஆசை. ஆனு அந்த இடம் ஊாலெருந்து ரொம்ப தூரம. என்னை யாரும் அழைச்சிகிட்டுப் போகலே. பட்டணத்துக்கு வரும்போது வண்டியிலிருநதபடியே அந்தப் பக்கத்தை எட்டிப் எட்டிப் பார்த்தேன். ஒன்றும மொளசசமாதிரி தெரியலெ.

டாகடர். பொன. சௌரிராஜன்,
திருப்பதி.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப் படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட ‘டிமாண்ட் டிராஃப்ட்’ (D. D) அல்லது ‘பேஆர்டர்’ (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். ‘செக்’ (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

---

இன்னும் ஏழெட்டு நாள்ளே தாத்தா மொளச்சிடுவார்னு நெனுச்சிகிட்டே ஊருக்கு வந்துட்டேன.

வந்து பார்த்தா முருங்கை மரம் வெள்ளைவெள்ளையாக அரும்பு இட்டிருந்தது. சிலநாட்களில் பூத்துக் குலுங்கியது. பச்சைப் பாம்பு குட்டிகள் போல, நீட்டிவிட்டஇரும்புக்கம்பிகள் போலப் பிஞ்சுகள் தொங்க ஆரம்பித்தன. அப்போதுதான் அநதப் புயல் காற்று வந்தது. எங்கள் வீட்டு முருங்க மரம் அடியோடு, வேரோடு பெயர்ந்து விழுந்துவிட்டது. அப்பா அப்படியே வெட்டி வேலைக்காரிக்குக் கொடுத்துவிட்டார். எனக்கு ஒரே கவலையாகப் போயிடுச்சி. தாத்தா நெனப்பு வந்தது. சின்ன போத்தா வைச்சநெனப்பு வந்தது. தாத்தாவை மண்ணுக்குள்ளே போட்ட நெனப்பு வந்தது. முருங்கை மரம் விழுந்த நெனப்பு வந்தது. அழுகை அழுகையாய் வந்தது. அழுதுகொண்டே தூங்கிப்போயிட்டேன்.

“தம்பி..தம்பி! என்னப்பா. நான் கூப்பிட்டு எவ்வளவு நேரமாகிக்கிறேன்”, எனற முருங்கை மரத்தின குரல் மீண்டும் கேட்டது.

‘ஓ! முருங்கை மரமா. வா...வா. ஒன்னதான் அப்பா தூக்கி எறிஞ்சிட்டாங்களே. தாத்தாவை மணணிலே போட்டுட்டாங்க. ஒன்னெயும் எறிஞ்சிட்டாங்க. தாத்தாவையும் இனிமே பாக்க முடியாதாம். தாத்தா வரமாட்டாங்களாம். நீயும் வரமாட்டியா? ஒன்னெயும் இனிமே பார்க்கமுடியாது’!

‘அடே தம்பி! ஏன் பாாக்க முடியாது? ஓங்க தாத்தாவோட தாத்தா கொழும்பிலேருந்து என்னெக்கொணடாந்தாங்க; ஊர்த்தோட்டத்தில் வச்சாங்க. அப்புறம் ஊரெல்லாம் போத்துப போத்தா வெட்டிகிட்டுப் போயி வச்சாங்க. இங்கேயும் ஒரு போத்துக் கொண்டாந்தாங்க. இப்போ மரமா வளர்ந்துட்டேன்; வேரோடு விழுந்திட்டேன்; வேலைக்காரி எடுத்துக்கிட்டுபோயி அவ தோட்டத்திலே, அவ வேலெ செய்யிறவங்க தோட்டத்திலே யெல்லாம் நட்டுட்டா. மேல தெருவுக்கு அப்பா குடிபோகப் போறாங்களெ அங்கெ நடுவதற்கும் ஒரு போத்து எடுத்து வச்சிருக்கா. இங்கேகூட வேரிலிருந்து நான் மொளெப்பேன். கவலைப்படாதேடா பையா! நான் வாழ்ந்து கொணடே இருப்பேன். நான் அழியவே மாட்டேன. சின்னதா இருககிறது பெரியதா வளருகிறது. துளிாப்பது, கிளைப்பது, முறிவது எல்லாம் என்னை ஒன்றும் செயயாதுடா! நான்எப்போதும் இருப்பேணடா எங்கேயும் இருப்பேண்டா! கொழும்பிலே இருந்தேன; இப்ப இங்கேயும் இருக்கேன். ஊர்லே இருந்தேன்; இப்பவும் ஊர்லே இருக்கேன். நம்ப வீட்டிலே இருந்தேன்; இப்பவும் இங்கே இருக்கேன். இன்னும் பாரு. நீ பெரியவனா ஆனு அப்பவும் இருப்பேன். கவலைப்படாதேடா’ என்று முருங்கை மரம் சொன்னது.

“அப்படின்னு எங்க தாத்தாவை மண்ணுக்குள்ளே போட்டுட்டாங்களே அவரு மொளப்பாரா”.

‘ஓ அவரு! மொளைச்சிருககாரே ஓங்க தாத்தவோட தாத்தா கொழும்புலே இருந்தாரலே அவருதான ஓங்க தாத்தாவா மொளைசசாரு. இப்ப நீயா மொளெச்சிருக்காரு, இன்னும் மொளெப்பாரு. ஒன்னெ பாத்து அம்மா சொன்னுங்கலே. ‘எங்க அப்பாதான இவன்னு’ ஓங்க அம்மாவோட அப்பாதானே தாத்தா. அவரு ஒனக்குள்ளேமொளச்சிருக்காரு. இனியும் மொளச்சிக்கிட்டே இருப்பாரு; தாத்தாவோடே தாத்தாவோட தாத்தா எங்கெங்கோ மொளச்சிருப்பாரு மொளச்சிகிட்டே இருப்பாரு.’

‘டேய் கண்ணு, பொழுது விடிஞ்சுடிச்சுடா. எழுந்திரு குளிச்சிட்டுப் பள்ளிக்கூடம் போகனும்லே.’ அம்மாவின் குரல் கேட்டு விழித்தேன். முருங்கை மரம் காணவில்லை. ஓடிப் போய்த்தோட்டத்தைப் பார்த்தேன். முறிந்துபோன முருங்கை மரத்தின் வேர் துளிர்த்திருந்தது வீட்டிற்குள் ஓடி வந்து கண்ணுடியில் என் முகத்தைப் பார்த்தேன். தாத்தா என்னைப் பார்ப்பது போலவே என கண்கள் என்னைப் பார்த்தன.

இன்னும் சில ஆண்டுகளில் பிறவியின் சங்கிலித் தொடர் அவனுக்குத் தெரிய ஆரம்பித்து விடும்.

★



# கோவிந்தனும் - குருகுலவாசமும்

புனிதமான யமுனை நதி-நிஷ்களங்கமான முனிவர்களின் உள்ளம போன்று பளிங்கு நீரை சுமந்து கொண்டு கரை புரண்டு போய்க் கொண்டிருந்தது. அதன் கரைகளில் உள்ள கானகம் பசுமை நிறைந்த தாவரங்களைக் கொண்டதாக காட்சியளித்தது. எங்கும் சாந்தி நிலவியது.

கானகத்தின் உள்ளே ஒரு பர்ணசாலை. அதுதான் திரிகால ஞானி ஸ்ரீ சாந்தீபனி முனிவரின் ஆஸ்ரமம். அவர் காலை கர்மாக்களை முடித்துக் கொண்டு வெளியே வருவதற்கும் கதிரவன் குணதிசை எழவும் சரியாக இருந்தது.


திரு. ரா. தாமோதரன்,
திருமானூர்.


குருதேவா பிரசன்னமாகிவிட்டதைத் தெரிந்து ஆஸ்ரமத்தின் முன்பு பணிவுடன் அமர்ந்திருந்த சீடர்கள் எழுந்து ஒவ்வொருவராக பெயரைச் சொல்லி நமஸ்கரித்து விட்டு தங்கள் வருகை பட்டியலைக் கூறி பணிவுடன் அமர்ந்தனர்.

குருதேவரின் பார்வை சீடர்களையெல்லாம் நோட்டம் விட்டு தன் முன்னே கை கட்டி அடக்கமாக அமர்ந்திருக்கும் அந்த சீடன கண்ணன் பால நிலைபெற்றது.

அவர் கணகளை மூடி மௌனியாகிவிட்டார். கணகளில் நீர் கசிய-ஞானக்கண் திறக்க ஞானதிருஷ்டியில் அவன்மனத்தின் ஞானதீபம் பேசியது. "கண்ணா - கார்மேக வண்ணா ஆலிலை மேல் ஓர் பாலகனாய் ஞாலம் ஏழும் உண்டு உமிழ்ந்தவனாகிய நீயா என் சீடன். கைகட்டி வாய்புதைத்து யாதுமறியாத பாலகனாய், அமர்ந்துள்ள பிரபுவே - உன்னை சீடனாகப் பெற்ற நான் எத்தனை ஜென்மங்களில் எவ்வளவு புண்ணியம் செய்தேனோ. யான் பெற்ற பெருந்தவப் பேர் வசிட்டனையன்றி யார் பெற்றார். எவர் பெற்றார். உன்னால் நான் மிக உயர்ந்தேன். என் சீடனான ஞானாசிரியனே - ஞானத்தையெல்லாம் பிழிந்து பாரினில் பாலில் தேனாக கீதை எனனும் கங்கா பிரவாகத்தை பாயச் செய்யப் போகும் கீதாசசாரியனே - முன்னம் சிறு பாலகனாய் குரளனாக நடந்து சிறு கால்கள் காட்டி மூவுலகும் அளந்த திருவிக்ரமா - சீடனாக என முன்னே அமர்ந்துள்ள உன் திருக்கோலத்தால் என்னை ஆட்கொண்ட பிரானே - உன் திவ்விய மங்கள ஜோதி மயமான உருவை என்மனத்திடை பிரதிஷ்டை செய்து விட்டேன். என் மனதை விட்டு அகலகில்லாய். உன் மனத்திடையானும், என மனத்திடையே நீயும் நீக்கமற நிறைந்து விட்டோம். சீடனும் குருவும் ஒருவருக்குள் ஒருவராய் அமையும் பாக்கியத்தை அருளிய ஞானச்சாரிய சீடனே உன் திருவுள்ள ஞானதீபம என்னுள்ளே என் எனறும் பிரகாசிக்கட்டும்.

யாதவகுல திலகனே நாளையுடன் உனது குருகுலவாசம் முடிவடைகிறது. நாளை மறுநாள் நீ துவாரகாபுரி மன்னன். ஆனால் என் மனத்திலே பிரதிஷ்டை செய்துவிட்ட உன் திருமேனி நிரந்தரமானது. மாதவா, இதுபோன்று பாண்டவரில் ஒருவனும் உன்னை அவன் மனத்திடை பிற்காலத்தில் பிரதிஷ்ட்டை செய்யும் பாக்கியம் பெறுவான்".

ஞானக்கண் மூடி ஊனக் கண்கள் திறக்கப்பாடங்கள்ஆரம்பமாகின்றன

மாலை கண்ணனின் குருகுல வாசமும் முடிவுற்றது.

மறுநாள் காலை கண்ணன் யமுனை நதி நோக்கி நடக்கிறார்.

குருதேவர் கண்ணன் நடந்து சென்ற பாதச் சுவடுகளை பார்த்து பரவசமடைகிறார்.

குருபத்தினி : ஸ்வாமி என்ன அப்படி பார்க்கிறீர்கள்.

குரு: பிரியே! அந்த பாதச் சுவட்டைப் பார்த்தாயா? சங்கு சக்கர ரேகைகள் பதிந்துள்ளன. இந்த மண்ணுலகம் செய்த புண்ணியம், ஸ்ரீமன் நாராயணனே கோவிந்தனாக, கண்ணனாக கிருஷ்ணவதாரம் எடுத்துள்ளார்.

குருபத்தினி ! ஸ்வாமி ! உங்கள் சீடர் கண்ணன் அவதார புருஷரா.

குரு : ஆம் தேவி -கிருஷ்ணாவதாரம்

குருபத்தினி : ஸ்வாமி! அங்கனமாயின் அவருக்கு குருகுலவாசம் முடிவுற்றதால், குருதக்ஷிணையாக நான் அவரை ஒன்று கேட்கட்டுமா?

குரு : தேவி! கேட்டுக் கொடுப்பவன் அல்லன் கோவிந்தன். அண்டசராசரங்களிலும் நீக்கமற நிறைந்தவன். உன் உள்ளத்தே இருக்கும் தாபத்தையும் தெரிந்து அருள் புரிவான். ஆனால் அவனை 'நீயே கதி'யென

சரணாகதி அடைந்தவருக்கு எல்லையில்லா அவன் கருணை கிடடும

குருபத்தினி ஸவாமி! நமக்கோ வயதாகி விடடது விருததாபபிய காலததில நமககுத துணையென நமபியிருநத நம மகனை முதலை கொணடுபோயவிடடது கண்ணன அவனை மீடடுத தருவாரா காலம கடநத பிராாததனையாகிவிடுமா எபபடியாயினும நான அவரே சதியென சரண அடைகிறேன அவனை நமபினோா கெடுவதிலலையென நானகு மறைகள ஓதுகினறனவே, கோவிநதா - காாமேக கண்ணா கருணாமூாததி உனனை சரண் அடைநதேன என பாலகனை மீடடு தநதருள புரிவாய மாதவா

குரு தேவி! உன பிராாததனை நிறைவேறடடும அதோ கண்ணனும நமமிடை விடைபெற வநதுகொணடிருககிறாா

குருபத்தினி ஸவாமி! அவருககு முனனால் ஒரு பாலகன நமமை நோக்கி ஓடி வருபவன யாா? நமபிளளைதான சநதேகமிலலை?

ஓடி வநத முனிவா மகன தாய தந்தையா பாதஙகளிலே வீழநது வணஙகுகிறான, அவாகள ஆனநதக கண்ணீா மலக "நாராயணா உனனை முதலை கொண்டுபோன பிறகு எஙகிருந்தாய? இபபொழுது எம்மிடை எபபடி வநதாய" என வினவினா

குமாரன எனனை முதலை கொணடு போன பொழுது அஷடாக்ஷர மநதிரததைக கூறினேன பிறகு நான எனநிலை மறநதேன என நினைவு வந்த பொழுது நான தேவருலகில இருபபதை உணாநதேன பூாவாசிரம சிந்தனை எலலாம மறைநதன அஙகே ஒரே இனப மயம் சதா மஙகளகீதஙகளஇசைகக, நினைப பதெலலாம கிடைததது

அபபா இனறு அஙகு ஓா அறபுதம அதிகாலை நிகழநதது பரிமள கநதத்தோடு ஒரு திவவிய ஜோதிபரவிறறு அதனிடையே ஒரு ராஜகுமாரன தோனறினாா எலலோரும பயபகதியுடன வணஙகினாாகள அவா, 'நிததிய சூாிகளே உஙகளுக்கு மஙகளம உணடாகடடும நான பூவுலகிலிருநது வருகிறேன மகரிஷி சாநதீபனி முனிவரின சீடனாக வநதுளளேன அவா மகனை அவரிடம அனுபபுவீாகளாக' எனறு சொனனாா

அபபா, உடனே இரணடு தேவபுருஷாகள என சிரசிலே பூ மலாகளைப போட எனககு பூாவாசிரம எணணஙகள உதயமாயின எனனை ஒரு புஷப விமானததில் கொணடு வநது யமுனை நதி தீரததே விடடு விடடு மறைநதனா

அபபா, அநத ராஜகுமாரன தனனை உஙகள சிஷயன எனறு சொனனாரே அவா எநத தேசதது இளவரசா அபபா

முனிவா மகனே! இனறு வரை அவா எனனிடம குருகுலவாசமசெயத சிஷயனே அவா, அவருககு நான தான குரு ஆனால மகனே குரு எனற சொலலுககு தததுவாாததம காண இலககியமஉண்டென றால அதறகும் இலககணம கண்டால அநத இலககணததிறகு இலககாகி சகல லோகஙகளிலும் உளள குருமாாகளுககெல்லாம குருவான ஞானாசிரியன அவா நாஙகள முனிகுலமதொழும் கடவுளான முகுநதனாவான அவன சகல லோகஙகளும அணடஙகளும, பேரணடஙகளும, சநதிர, சூரிய, ஆழகடல எலலாம அவருள அடககமாகி திருவிசுரமனுக உலகளநத கருணாமூாததி உனனையும எஙகளிடை சோதததயாநிதி அதோ விடைபெற வருகிறாா தேவரும, முவரும, வேதஙகளும கோஷிசகும அவா திவவியபாதஙகளை சரண அடைவாயாக

முனிகுமாரன கண்ணன கழலிணைகளை சரண் அடைநதான

கணணன குருவிடம விடைபெறறாா பாதஙகளில கிடநத முனிகுமாரனைத தூககி 'சிறுவனே தநதை சொல மிகக மநதிரமிலலை தாயின சிறநததொரு கோவிலுமில்லை அனறுடகாாமாககளை சிரததையுடன செயது வருவாயாக மஙகளமுணடாகடடும' எனறு கூறி பஞசகலயாணிகள பூடடிய ரதததில, சாதயகி ஓடட, துவாரகை நோககி சென்றாா

ஸ்ரீ சாநதீபனி முனிவா இருகரஙகளையும தூககி கணணீா மலக கணணன சென்ற திசை நோககி வணஙகினாா, வாழததினாா தேவாகள பூமாாி பொழிநதனா யமுனா நதி தீரமெலலாம மஙகள கநதம பரவியது



# தத்துவம் காட்டும் இந்தியத் தர்சனங்கள்

இந்தியத் தததுவ சாஸதிரததில ஆறுமுறைகளில தாசனததைப பறறி பேசபபடுகிறது "தாசனம" என ருல் "பாாதது அறிதல்" எனறு பொருள படும குழநதை பாாக் கிறது ஆனுல் அறிகிறதில்லே அது போல முதலில் பிரபஞசததையும (matter) பிறகு பரமபொருளேயும அறிதலாகும அவைகளைப பாாபப தறகு வழிகாடடும நூல்களே ஆறு தாசனஙகள ஆகும

வேதஙகளின அனுசரணையாகவநத ஆறு தாசனஙகளான, 1) நியாயம (नियायम्) 2) வைசேஷிகம (वैसेसिका) 3) மீமாமசை (मिमान्सा), 4) சாஙக யம் (सांख्या), 5) யோகம (योगा), 6) வேதாநதம (वेदान्ता) ஆகும ஞானத் தின மேலநிலேககு இவைகள கொண்டு செலவதால ஆறுசாததிரங கள எனறும் இதனேக் கூறுவர்

நியாயம வைசேஷிகம

மனதை உடையவன மனிதன சிந்தனே எனபது மனக கூறுகும சிந் திககும மனிதனே சிறபபான மனிதன ஆகிறுன "எபபடிச சிநதிபபது" எனறு கூறுவது நியாயம ஆகும "எதைபபறறி" சிநதிபபது எனறு வரையறுபபது வைசேஷிகம ஆகும

மனதையும மொழியையும உண மைக்கு ஒபபத திருததியமைபபது இநத இரண்டு தாசனஙகளின நோகக மாகும பேசியவன, பேசியபொருள கேடடவன இவர்களுககிடையே உளள ஒறறுமை, வேறறுமை விவா திக்கபபடுகிறது

நியாய சூத்திரஙகளே இயற்றிய வா "கௌதமா" எனற ரிஷி உண் மையை உணாதற்கு நியாய சாஸத திரபபடி நானகு பிரமாணஙகள உள ளன அவைகள 1) பிரத்யக்ஷ பிர மாணம, 2) அனுமானப பிரமாணம் 3) உபமானப பிரமாணம 4) சபதப பிரமாணம அலலது வேதப பிரமா ணம் ஆகும்

எடுத்துக கொணட விஷயததை தாக்கம பண்ணுவதில் மூனறு முறை கள இருககினறன அவைகள வாதம, விதணடை ஜலபபம என னும பெயர் பெறறுளளன அறிவு வளர்சசிக்கும ஆத்ம சாதனத்திறகும பெருந்துணையாக இருபபதற்கு பகுத்த றிவும, தத்துவ ஆராயசசியும் இனறி யமையாதன ஆகும

மீமாமசை

இதனே இயறறியவா "ஜைமினி" எனபா இந்த சாஸததிரத்தை பூாவமீமாமசை எனறும், காம மீமாமசை எனறும கூறுவா ஆதி அநதம இல்லாத வேதமானது நித் யம ஆகும் எனறு இநத தர்சனம கூறு கிறது சபதப பிரமாணம அலலது வேதப பிரமாணமே முடிவானது, அதறகு மேல் எநதப பிரமாணத்தை யும நாடவேண்டியதில்லே எனறு இத்தாசனம கூறுகிறது

மனிதன அதாமததை விடுத்து தா மததை மேறகொளள வேண்டும வேதஙகள புகடடுகிற காமஙகளெல் லாம யாகஙகள எனறு கூறுகினறன பூாவ மீமாமசையின்படி சுவர்ககப பிராபதியே வாழககையின குறிக கோளாகும

சாங்கயம

இதனே இயறறியவா "கபிலமுனி" ஆவாா உலகமும, உயிரும (புரு ஷன) தனித்தனியாக இருக்கிறது எனறு இநத தர்சனம கூறுகிறது பிரகிருதியானது (உலகம) இருபதது நானகு தததுவஙகளாகப பரிணமிக் கிறது அவைகள பஞசபூதஙகள-5, அவைகளின தனமாததிரைகள—5, ஞானேநதிரியஙகள-5, கர்மேந்திரி யங-5, அநதககரணஙகள—4 முதலிய னவாகும சாஙகிய தத்துவபபடி இருபததைநதாவது தத்துவம புரு ஷன ஆகும (உயிா) பிரகிருதியானது ஜடவஸ்து, புருஷன சேதன வஸது அதாவது அறியுநதனமை பிரகிரு திக்கு இலலே, புருஷனுககு உணடு

பிரகிருதி - புருஷன கூடடுறவால் அறிவோடு கூடிய கிருத்தியம பிர பஞசமெஙகும நிகழநது வருகிறது புருஷனுக்குப பாடம புகடடி, அனுப வததை வளர்த்து, முகதி நல்குவது பிரகிருதியின செயலாகும

யோகம

இந்த சாஸ்த்திரத்தை இயறறிய வர் பதஞசலி முனிவர் ஆவார் உயர்நத நெறியினைப பயின்று அந் நெறியினே அடைவது யோகம என னும் பொருளபடும சைவர்கள இதறகு சிவராஜயோகம என்று கூறு வர் இநநெறி எடடு அஙகஙகளே உணர்ததுகிறது இதனே அஷடாஙக யோகம எனபா அவையாவன 1) இயமம, 2) நியமம, 3) ஆஸனம 4) பிராணுயாமம், 5) பிரத்யா ஹாரம, 6) தாரணே, 7) தியானம 8) ஸமாதி எனபனவாகும

இயமம எனருல் ஐமபொறிகளே அடககுதல ஆகும நியமம எனருல அனுஷடிக்க வேண்டிய நியமனங களும மனதை மாணபுடையதாககு கினறன ஆஸனம-பிராணுயாமம— சரீரத்தை சீரிய நிலேயில் வைத்தலும்

திரு எஸ நாராயணசுவாமி,
திருவிடைமருதூர்

பிராணவாயுவினை முறைப்படி கிரகித்து இருப்பதுமாகும் பிரத்யாஹாரம்— புறவுலகில் போய்க்கொண்டிருந்த இந்திரியங்களை அந்தர் முகமாகத் திருப்புவது தாரணை—ஐம்பொறிகளையும் தன்னுள் மனதில் லயமாகுதல் ஆகும் தியானம்—மனதை சீரிய லட்சியம் ஒன்றில் தைலதாரை போன்று தன்னுள் செலுத்துவது தியானம் ஸமாதி — யார் எந்தத் தத்துவத்தை தியானிக்கின்றாரோ அந்த தத்துவ சொரூபமாக ஞான திகழ்வது புருஷனென்ற பரமாத்மாவோடு ஒன்று படுதல் ஜீவாத்மன (உயிர்)பிரகிருதியை(உலகம்) வென்று எத்தகைய பெருநிலை எய்தலாம் என்பதை உணர்த்துவதே யோகசாஸ்திரமாகும்

## வேதாந்தம்

வேதத்தின் அந்தம் வேதாந்தம் வேதங்களின் ஞான காண்டமாகத் திகழ்வது உபநிடதங்கள் ஆகும் இவைகளே வேதாந்தம் எனப்படும்,

ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் மறைவது மெய்ப்பொருளாகாது ஓர் இடத்தில் இருந்து கொண்டு மற்றோர் இடத்தில் இல்லாததும் மெய்ப்பொருளாகாது ஒரு காரணத்தால் தோன்றி அக்காரணம் ஒழியும் பொழுது தானும் அழியும் பொருள் மெய்ப்பொருளாகாது கால தேச வர்த்தமானத்தில் கட்டுப்படாததே மெய்ப்பொருள் அது ஸத் என்று கூறப்படுகிறது அப்பொருள் பேரறிவு சொரூபமாயிருப்பதால் அது சித் என்றும், பின்பு இன்பத்துக்கு அது உறைவிடம்-ஆனந்தம் இந்த ஆனந்தத்தை பிரம்மம் என்கிறது உபநிஷத்

அண்டங்கள் யாவும் உலகங்கள் யாவும் ஜகத் எனப்படுகின்றன பின்பு இவ்வுலகங்களில் உள்ள உயிர்கள் யாவும் ஜீவர்கள் அல்லது ஜீவாத்மாக்கள் என்று இயம்பப்படுகின்றன ஜகத்தும் ஜீவனும் பிரம்மம் என்னும் அறிவுப் பெருவெளியில் தோன்றவும் இருக்கவும் ஒடுங்கவும் செய்கின்றன

முக்தியடைய முயலுகிற ஜீவாத்மா வேதாந்த தரிசனத்தை அனுஷ்டிக்கிறான் பரமாத்மாவை நோக்கி அவன் செய்கிற பிரயாணத்தில் மூன்று நிலைகள் உள்ளன அவைகள் முறையே அத்வைதம், த்வைதம், விசிஷ்டாட்வைதம் எனப்படுகின்றன

வேதாந்தத்தை பிரமாணமாகக் கொண்டு விளங்குபவைகள் சைவம் வைஷ்ணவம், சாக்தம், காணபத்யம் கௌமாரம், சௌரம் எனும் ஆறு சமயங்களாகும்

ரிக் வேதத்தில் "ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி" "एक सत् विप्रा बहुधा वदन्ति" என்ற வரி நமக்கு உணர்த்துகிறது. மெய்ப்பொருள் ஒன்று அதற்குச் சான்றோர் பல பெயரிட்டு அழைத்து வருகின்றனர் என்று விளக்குகின்றது வேதாந்தங்களின் உண்மைப் பொருளினை உணர்த்த பல நிலைகளில் நின்று ஆதி சங்கரர், இராமானுஜர், மத்துவர் இம்மூன்று ஆச்சாரியர்களும் விளக்கம் தந்துள்ளனர்



## வாழ்க்கைக்கு சில

பார்த்துக் கெட்டது பிள்ளை
பார்க்காது கெட்டது பயிர்
இட்டுக் கெட்டது காது
இடாது கெட்டது கண்
உண்ணு கெட்டது வயிறு
உண்ணாமல் கெட்டது உறவு
கேட்டுக் கெட்டது குடும்பம்
கேளாது கெட்டது கடன்

**திருமுருக கிருபானந்தவாரியார் கூறியது:** தீய பழக்கங்களை பிள்ளைகள் பார்த்தால் கெடும் பயிரை தினம் பார்த்து வளர்த்தால் கெடாது காதில் குச்சி போன்றவற்றைப் போட்டுக் குடைந்தால் கெடுதல் கண்ணுக்கு மை, சுருமா போன்றவை இட்டால் நல்லது நிறையவும் உண்டால் வயிற்றிற்கு நல்லதல்ல உறவினர், நண்பர்கள் கொடுக்கும் விருந்து உண்டால் உறவு வளரும் நமது குடும்பத்தினர் பற்றி அடுத்தவர்கள் கூறுவதை அப்படியே கேட்டு எடுத்துக் கொண்டு செயல்பட்டால் குடும்பத்தில் குழப்பம் ஏற்படும் சிந்தித்து செயல்படுவது சிறப்பாகும் இக்காலத்தில் கடன் கொடுத்து விட்டால் கேட்டு பெற்றுக் கொள்வது, கடனைத் திருப்பி பெற உரிய வழி

தகவல் திருமதி கமலவேணி தனபதி திருச்சிராப்பள்ளி

# அஷ்டலக்ஷ்மி போற்றி!

சகதி நீயே சாநதம நீயே
உருவும அருவும அனனை நீயே
சகதி இயககம சிவமென ஒடுககம
இலலற மாணபின இணையுறு வடிவம
சகதிப பொருளே! பேறே! வீரமே!
வெறறியே வளமே? வாழவே! போறறி!
சகதி வடிவே திருமகள உருவே
திருவெனப போகொள ஆதிலக்ஷமீ!

பிறபபின வருநதிரு பேருறவுத திரு
இல்லறப பாஙகின இனிமைத திருவே
உறவின பெறுபயன உலகுவளா செயலாம
நினறன மைநதன நானமுகன செயலே
உறவாய மலரும உயிாதான மலரும
மலாதலே உலகம மரபில வாழும
உறவே! உயிாவளர் திருவே! பேறனுள
பேறெனப பேசும சந்தான லக்ஷமீ!

களிறறு வடிவாம கணபதி தாயே!
உடலவலி உரவலி வேறும் நல்குவை
களிறறு முகமதான உயிரது ஒருமையே
அனைததும நினமடி ஒனறெனப புகலுமே!
களிறறுப பூசனை ஆதி மூலமா
அழைதத குரலது திருமால நாயகி!
களிறு பூசிககும தாமரைச செலவீ!
ஒளிவளா விளககே! அருளவாய கஜலக்ஷமீ!

உடலவீரயம திகழும வாழவில உயாதரும
நலமதன பேரும வீரயம ஆகிடும
உடலதன தோறறம உலகு புகழும
பிறபபதன சீரும நலமதன வீரயம
கடலெனத தொடாதரு துனபம யாவும
பொறுபபது மனதிகழ பொறுமை வீரயம
படாதரு சீரே! உயிரே வீரயம!
திடமே! திருவே! வீரய லக்ஷமீ!

பொருளாம வாழவின பொருளே பொருளாம
வரமருள வாழவை வளாபபது பொருளே
பொருளாம தருவளம தனனை வளாககும
அருளவளம திகழவே தாரணி வளரும
ஊருணி மருநதெனப பயனமரம எனறு
போறறிடும பயனது பாாததனைப போறறும
பொருளதிரு வழஙகும அருளதன தாயே
அருளே பெருகவே சீர்தன லக்ஷமீ!

வாழவே புதையல பயனெனத திகழவுற
ஒருமை மனமதன ஒனறிய மகிழவில
சூழவுறும புதையல சிநதை [illegible]யமை
இறைமை திகழ இனிமை பெருகவே!
ஏழகடல ஒலியே அமைதி வாழவுற
உயிாதனில ஆனநத வெளளம பாயவே
ஆழகடல புதையல் ஆழமனம பெறறிடும
ஐஙகரன தாயே! ஐஸவர்ய லக்ஷமீ!

வெறறி பிறபபது மெயயது நலமே
வெறறிப பிறபபது மெயமமை மனமே
வெறறி பெறுமது ஐமபுலத தூயமை
வெறறி பிறபபது வீரநதிகழ குணமே
வெறறி தருமது வீர சிநதனை
வெறறிப பிறபபது நதியனை சீரே
வெறறி சூழுமது மாறறருங கருணை
வெறறிப பிறபபே! சௌஜய லக்ஷமீ!

தனநலம பெருகிடத தானநலம பெருகும
வயிறு வாடா மகிழவுப பெருககமே?
இனநலம பெருகிடப பகையிலா நாடு
தீயினிற செமமை தீாததப பெருமை
தானநலம அருளும நலலமுது ஊடடுவாய
அமுதச சுவைதரு அமுதே! அழகே!
வானநலம மழையெனலா பூமிநலம் பயிராய
தானயம ஆககிடும தானய லக்ஷமீ!

எடடும வாழவின நலமபல அருளவாய
எணணும வணணம ஏறுநலம புரிவாய!
ஊடடும உவபபெலாம அனுபவப பேரருள
உனனதம பொழிய உயிருள உறைகுவாய
தீடடுந தாமரை மலர்வாழ திருவே
ஆடும பாங்கின வாழககை ஏடே
எடடிரு வாகிடும மஙகலத தாயே!
அருளமழை பொழிவாய அஷட லக்ஷமீ!

—படைபபாளர் கமலம்சஙகர் — மதுரை

# மதிப்புரை

(உங்கள் இஷ்ட தெய்வங்களின கவசங்கள தொகுதது எழுதியவா புஷபா அசோககுமாா, 1987, வெளியீடு முகில் பதிபபகம், 76 குருவபப செட்டித் தெரு, சிந்தாதிரிப பேடடை, சென்னை-600 002, பககங்கள் 175, விலை ரூ 14)

'சுவரை வைததே சிததிரம்' என னும முதுமொழிக்கிணஙக, மாநதா களின அகவாழவு, புறவாழவு ஆகியவை மட்டுமேயனறி, ஆனமீக வாழ்வுகூட ஐம்பூதஙகளாலாகிய உடலைபபேணிப பாதுகாததுககொள் வதை ஆதாரமாகக கொண்டதே ஆகும். போாக்களத்திற்குச செல லும வீரர்கள, தஙகள உடலின உறுபபுககளை எதிரிகளின ஆயுதங களிலிருநது பாதுகாத்துக்கொளளும வகையில் பலவேறு கவசங்களை அல்லது காபபுகளை அணிந்து கொளளும் வழக்கம அனைவரும அறிநதிருககும ஒனறேயாகும அஙஙனமே, இறை யனபர்களும், தலை, மாாபு, இடை, கால்கள, கைகள போனற உடலுறுப புக்களைப பலவேறு நோயகளிலிருந தும, பல்வகைத துர்ததேவதைகளின தீய விளைவுகளிலிருநதும, பல்வேறு திககுகளிலும, வைகறை, காலை, பகல, மாலை, இரவு போனற சிறுபொழுது களிலும், பல்வேறு அலுவலகளைச செயயும போதும் பாதுகாததுக கொளளும் பொருட்டு, தமிழிலும சம்ஸ்கிருததிலும இயறறப பெற றுளள பல்வேறு தெயவஙகளின கவசத துதிகள வேதங்கள், புராணங் கள மறறும இதிகாசஙகள போனற சமய நூல்களில் ஏராளமாகக் காணப படுகினறன

கவச இலககியம எனறு ஒரு தனித துறையாகவே கருதபபடும அளவிற்கு அவறறின எணணிககை மிகுதியா யிருபபது குறிபபிடததககது

இநநூலில, விநாயகா, சணமுகா (சுபபிரமணியா), அயயபபன, துளசி, நவகிரகஙகள, தேவி, லக்ஷமி, சரஸ வதி, காயததிரி, நாராயணன, நரசிமமர், அயகரீவர், இராமா, சீதை, ஆஞ்சநேயர் (ஹனுமான), சுதர்சனர், இயமன ஆகியோர் பறறிய நாறபத தாறு கவசஙகள அமைநதுளளன (இவறறுள முதல் மூனறுககு வரிசை எண் குறிபபிடபபடவிலலை) தமிழில முபபததொனறும சமஸகிருதத்தில பதினைநதும உளளன தமிழிலுளள தேவி கவசம (25), ஜெகதாமபிகை கவசம (30), காயததிரி கவசம (33) மறறும ஹனுமான கவசம (41) ஆகியவை முறையே சண்டி கவசம (27), மஹா பராசகதி கவசம (29), காயததிரி கவசம (34) மறறும ஆஞ்ச நேய கவசம (39) இவறறின தமிழாக கங்களாக அமைந்துளளன தமிழன பாகளுககு நனகு பழககமான அருண கிரி நாதரின கநத ஷஷ்டி கவசமும (2), பாம்பன குமரகுரு தாசரின (வரிசை எண் குறிபபிடபபடாத) சண்முக கவசமும் இதில உள்ளன

கவசஙகளாக நெறியுடனும உச சரிபபுப பிழையினறியும சொலலப பட வேண்டிய சமஸ்கிருதத தோத திரங்களை, அவறறைப பாராயணம செயவதனால் கிடைககககூடிய முழுப பயனையும பெற வேணடும எனில், தமிழில பெயாததது எழுதும போது மிகுந்த கவனம் செலுததபபட வேண் டும தவிரவும, சமஸகிருத 'சமாசம' எனபபடும் தொகை நிலைத்தொடர்ப பதங்களையும் தவறுகப பிரிதது எழுது வதும தவிாககபபட வேண்டும். அவ வகையில், இந்நூலில் உளள சமஸ கிருத மொழித தோத்திரஙகளில பிழைகள காணபபடுகினறன அடுத்த பதிபபில் இவற்றை நீககுதல இனறியமையாததாகும

பலவேறு வாழககை நலஙகளைப பெறுவதறகு இககவசத துதிகளை எந தெநத இடங்களில் எவவாறு படிக்க வேணடும எனபதைப பறறிய பய னுளள குறிபபுகள சேர்ககபபட்டிருப பது நூலின சிறபபு அமசமாகும எடுததுககாட்டுகள் துளசி கவசததை துளசி வனததில் அமாநது ஜபிதது வநதால எலலாவிதமான பேறுகளை யும பெறலாம், பலாச (புரச)மரத தினடியில் படித்தால் கலவிச செல வம பெறலாம, மகாவிஷ்ணுவின சநநிதியில பாராயணம செயதால அளவறற செல்வத்தினையும் ஏகப பட்ட போக பாககியஙகளையும அடை யலாம ஆஞசநேய கவசததை மட்டுமே தனியாகப படிககககூடாது முதலில ஹனுமான கவசமும், அடுத்ததாக சீதா கவசமும், அதறக டுததாக ஸ்ரீராமர் கவசமும படித் தாலே முழுபபயன ஏறபடும

சுபபிரமணிய (சண்முக) கவசங களில 'திருபபதி' (1), 'கதிா வேலஙகடமும' (5), 'திருமலை முருகா' (22) எனறும தொடர்கள வருவது கவனிககததக்கது

தினசரி பாராயணததிறகு ஏறற வகையில நலல முறையில அச்சாகி யிருககும இநநூல சமய நூல்கள் வரிசையில் வரவேறகபபட வேண்டிய ஒனறாகும

அ நடராஜன்



# சூரிய வழிபாடு

திரு K M பாபுஜி, M A , M Phil
கொடிவலசை



மனிதன் தன் வாழ்விற்கு இன்றி யமையாத நிலம், நீர், தீ, திங்கள், சூரியன் முதலிய இயற்கைப் பொருள் களை வணங்கி வந்தான் காலப் போக்கில் சூரியனின் பயன் கருதி உலகில் உள்ள அனைவரும் வணங்கி னர் என்பதை உலகப் பண்பாட்டு வர லாறு கூறுகின்றது அசையும் பொருள்கள் அனைத்திற்கும் சூரியன் உயிர் என்று ரிக்வேதம் கூறுகிறது நவீன முறையில் மக்கள் வாழ எல்லா விதத்திலும் சூரியன் பயன்படுவதால் மக்கள் சூரியனைக் கண்கண்ட தெய்வ மாகத் தொன்று தொட்டு வணங்கி வருகின்றனர்

சூரியன் தோற்றம்

பலலாயிரங்கோடி ஆண்டுகளுக்கு முன்னர் பிரபஞ்சத்தில் மேகம் போன்ற தோற்றத்துடன் 'நெடிலா' இருந்தது இது வேகமாகச் சுழலும் பொழுது பிழம்பு ஆகும் காலப்போக்கில் நெபுலாவில் இருந்து சில துண்டு கள் சிதறின அவ்வாறு சிதறிய துண்டங்கள் (பகுதிகள்) நாளடைவில் குளிர்ந்து திண்மை யான கோள்களாயின நெபுலாவின் மையப்பகுதியே சூரியன் ஆகும் இவ் வாறு சூரியனிடம் இருந்து பிறந்த கோள்கள் பிள்ளைகள் தன் தாயைச் சுற்றுவது போல சூரியனை இடைவிடாமல் சுற்றி வருகின்றன குடும்பத் திற்குத் தந்தை எவ்வளவு முக்கி யமோ அதைவிட கோள்கள் குடும் பத்திற்குச் சூரியன் முக்கியம் புரா ணக்கூற்றுப்படி முதலில் இருளான அண்டம் உண்டாகி அதன் மத்தியிலி ருந்து பிரமன் அதைப் பிளந்தான் அக்காலத்தில் 'ஓம்' என்னும் ஒலி யுண்டாயிற்று அந்த ஓங்காரத் தாலும் பூ புவ சுவ என்னும் வியாவிருதி திரயம் உண்டாயின பின்பு ஓங் காரத்தால் சூரியனுக்கு சூட்சும உரு உண்டாயிற்று இவ்வாறு சூரி யன் தோன்றினான்

சூரியனின் பிறப்பு வரலாறு

சூரியனைப் பற்றிய வரலாறு ரிக் வேதத்தில் மிகுதியாகக் காணப்படு கிறது அதிதி தேவதைக்குப் பன்னி ரண்டு பிள்ளைகள் அவர்களுள் விசுவ ரூபியாகிய விராட்புருஷனின் கண் களிலிருந்து பிறந்தவன் "சவித்துரு" என்பவன் ஆவான் இவன் ஒருமுகம் எட்டுக்கைகளைக் கொண்டவன் இரண்டு கைகளில் இரண்டு கமலம் மற் றைய கைகளில் தூபம், மணி, கமண் டலம், அபயம், வரதம், ஜபமாலை உடையவராய், பொன்னிறம், பொற் பட்டு வஸ்திரம், பொவனுபரணம் உடையவன் சூரியன் ஒரே சக்கர முள்ள தேரில் 'அருஸா' என்னும் ஏழு சிவந்த குதிரைகள் அல்லது ஏழு தலை யுடைய சிவந்த குதிரை பூட்டிய இர தத்தில் இடைவிடாது உலகைச்சுற்றி வருகிறான் இத்தேரை ஓட்டுபவன் அருணன் என்பவன் ஆவான் இவன் காசியபர் என்ற தந்தைக்கும், காதரு என்ற அன்னைக்குப் பிறந்த வன் சூரியன் இத்தேரின் மூலம் காலையில் தூங்கும் மக்களைத் தட்டி எழுப்பி அவர் அவர் வேலைகளுக்குச் செல்லுமாறு அறிவிப்பவன் என்று ரிக் வேதம் கூறுகிறது சூரியன் மனைவி 'சரண்யூ' ஆவாள் இவள் விஸ்வகர்மாவின் மகள் சரண்யூக்கும் சூரியனுக்கும் யமன் யமுனை என்ற இரட்டைக் குழந்தைகள் பிறந்தன சூரியனுக் கும் குந்திதேவிக்கும் பிறந்த மகனே கர்ணன் ஆவான் இவ்வாறு சூரிய னுக்குப் பல பிள்ளைகள் உண்டு

சூரியனின் வேறு பெயர்கள்

இரவி, தினன், மகி, எல்லாழம், செஞ்சுடர், பரிதி, தேரோன், எல

லோன, பானு, சண்டன, அருக்கன, தபனன், ஆதவன, அண்டயோனி, ஆயிரங்கதிரோன, கனலி, திவாகரன, கனலோன, பாஸகரன, அனலி, ஒளி யோன அலர், மார்த்தாண்டன, தின கரன, செங்கதிர, அரி, திமிராரி, அருணன, சூரன, ஞாயிறு, சவிதா, பகல், வெயிலோன், ஆதித்தன, விர்சிதன, விரோசனன, விகர்த்தனன், மித்திரன்,வெயயோன கதிரோன, வெஞ்சுடர், சோதி, பகல வன், எல்லே, பதங்கன, ஆதபன, ஆழ லவன், உதயன, இருளவலி, பொழுது, பகவன், சானறோன, வேந்தன், தாபநன், தரணி, எல்லி, சாயா பதி, பகலோன விண்மணி, பணிப பகைவன், கதிரவன, சுடரோன,மாலி சூாயன என இவவாறு சூரியனுக்குப பல பெயாகள உண்டு என பனைத பிங்கல நிகண்டு கூறுகிறது

சூரிய வழிபாடு

சூரிய வழிபாடு மிகத் தொனமை வாயந்த ஒரு வழிபாடு இவவழி பாடு இந்தியாவில் மட்டும் இனறி உலகில் எலலா நாடுகளிலும இருநது வருகினற ஒனறுகும, பழங்கால எகிபதியர்கள் 'ரா' அல்லது 'அதன' எனற பெயரால சூரியனே வழிபட்ட னர், கிரீஸ நாட்டில் 'அபபாஸோ' எனற பெயரில் சூரியனே வணங்கினர் எகிப்திலிருந்து கிரீஸ் முதலிய மேனு டுகளிலும் சூரிய வழிபாடு பரவியிருநதது. பாரசீகரின புனித நூலான 'ஜெநத் அவெஸ்தாவும' சூரியனேச் சிறந்த தெயவமாகக கூறுகிறது மாயர்கள எனனும் மெகஸிகோ பழங்குடி மககள சூரியனுககு நரபலி கொடுத்து மகிழ்சசியுடன் ஆடிப பாடி விழா கொண்டாடினர் இவ வாறு உலக மககளிடையே சூரிய வழி பாடு பரவியும சிறபபுறறும் காணப படுகிறது

இந்து மககளும் சூரியனே தெயவ மாக வழிபடுகினறனர், சூரியனே திருமாலின அம்சமாக முனனோர்கள் கருதினர். கீதையில் கிருஷ்ணன் ஆதித்யங்களில் நான சூரியனுக இருக்கிறேன' எனறு கூறுகிறா இன றைய நாடகளிலும மககள சூரியனே 'சூரிய நாராயண பகவனே' எனறு அழைககினறனா இராமாயணத்தில் இராமன சூரிய குலததில தோனறி உத்தம புருஷனுக வாழநது சூர்ய குலத்திறகுப பெருமை சேர்க கினறுன

மககள நோய இன்றி நலமாக வாழவும உழவுதொழில் சிறக்கவும நல்ல உணவுபபொருள் கிடைக்கவும மற்றும் பலவகையில் சூரியன பயன படுவதால் இவனே பகவான எனறு கூறுவர், சூரியன உலகில் முதலில் தோனறியவன,'எனவே' ஆதிபகவான' எனறு அழைபபர் வளளுவர் தம நூலில் முதல் குறளில், தமிழ் எழுத துக்களுக்கு எல்லாம் 'அகரம்' முதன மையானது அதே போனறு இவவுல கிற்கு இறைவன முதனமையானவன எனற கருத்தில்,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவான முதற்றே உலகு"

இவவாறு கூறுகிறுர் சூரியனுக்கு 'பகவான' எனறு ஒரு பெயர் உண்டு இளங்கோவடிகள் தமமுடையநூலில் முதலில்

"ஞாயிறு போற்றுதும ஞாயிறு
போறறுதும
காவிரி நாடன் திகிரிபோற்
பொற்கோட்டு"

எனறு சூரியனே வாழத்திய பிறகே தம் நூலே இயறறியுளளாா இவ வாறு சூரியனே வழிபடட பினபு நூல களேத் தொடங்கியுளளனா தமிழ்க கவிஞாகள,

சௌர மதம

சூரியன கண்ணுல காணக்கூடிய தெயவமாக உலகில பவனி வருகி றுன, சூரியனே முதனமைத தெயவ மாக வணங்கும சமயம 'சௌர மதம்' எனபபடும சூரியன வழி பாடு செல்வாககுப பெற்ற காலத தில் இம்மதம தோனறியது ஆறு இந்து சமயங்களில் சௌரமதமும் ஒனறுகும ஏழாம நூறறுண்டில வாழநத ஆதிசஙகரர் இமமதத்தைச சீர்திருத்திஞர்

சூரியன் கோயில்

விண்வெளியிலிருந்தபடியே சூரி யனே வணஙகிய மக்கள நாளடைவில சூரியனுக்குக கோயில்கள கட்டிப பல வடிவங்களில் சிலேவடிததுப கோயில களில் வைத்து வணங்கினா சூரிய வணககம் தமிழரின் தொனமை மரபு அம்மரபுககு ஏற்ப சூரியனுககுக் கோயில்கள கட்டுதலில் மககளும அரசர்களும நாட்டம கொண்டனா அரசாகள தாம வெனற நாட்டில் சூரியனின திருமேனிகளேக் கண்டால அவறறைக் கொண்டுவநது தமநாட் டில கோயிலகள கட்டி வணஙகினர் பெருமபானமையாக சோழ மனனா கள சூரியனுககுத் தனியாகக்கோயில கட்டினர் அககோயில்களில சூரி யனே நினற நிலேயில் இரண்டு கரங களுடன தலேக்குபின ஒளிரும நிலே யில் சிலே வைத்தனர் குமபகோணத் தில் கீழ்க்கோட்டம் எனற நாகேசுரன கோயில் சூரிய கோயில்களில ஒனறு கும, கும்பகோணத்திற்கு அருகில குலோத்துங்க சோழன ஒரு கோயிலே நிறுவியுளளான

இராஜேநதிர சோழன எடுதத கஙகைகொண்ட சோழபுரம திருக கோயிலில் உளள 'சௌர பீடம' குறிபபிடத்தகக ஒனறுகும இது தலே சிறநத சிறபமாகும, இசசிற்பத் தின கீழபபுறம எட்டுக கிரகஙகளும, அதன மேறபுறததில சூரியனும உள ளான ஒரு சக்கர இரதத்தினே ஏழு குதிரைகள இழுபபது போனறும, சூரியன நினற நிலேயிலும இருககும காட்சி கொண்ட கோயில சிதமபரத தில உளளது மறறும சூரியன கோயிலகள தஞ்சாவூா, மாமலல புரம முதலிய இடஙகளில் உளளன சஙகமருவியக காலததிலும சூரிய னுககுத தனிககோயில இருநதது என பதும அதனே 'உசசிக்கிழான கோட் டம'எனறு சிலபபதிகாரமகூறுகிறது

வடநாட்டில் சூரியனுக்குச் சிறந்த கோயில்கள் இருந்தன. 8ஆம் நூற்றாண்டில் காஷ்மீரில் லலிதாதய முக்கிபாதன் என்ற அரசன் கட்டிய 'மார்த்தாண்டா கோயில்', 11ஆம் நூற்றாண்டில் கட்டிய ஓசியா என்ற இடத்திலுள்ள கோயில், ஒரிஸ்ஸா மாநிலத்திலுள்ள "கொனார்க" என்ற கோயில் இக்கோயிலை நரசிமமவர்மனால் (1234-64) கட்டப்பட்டது. இவற்றில் இப்போது மிகவும் புகழ் வாய்ந்ததாகச் சிறந்த நிலையில் இருப்பது கோனார்க்காவில் உள்ள சூரியன் கோயில் ஆகும்.

இவ்வாறு சிறந்த நிலையிலும் தனிப் பெரும் கோயில்கள் கொண்ட சூரியன், நாளடைவில் நவக்கிரகங்களில் ஒன்றாகக் கருதி சிவன் கோயில்களிலும் மற்ற சில கோயில்களிலும் நவக்கிரக விக்கிரகங்களில் ஒன்றாகக் காட்சி அளிக்கிறார்.

காயத்திரி மந்திரம்

மந்திரங்களிலே மகா சக்தி வாய்ந்தது காயத்திரி மந்திரம் ஆகும். சூரியனுக்கு மிக உகந்த மந்திரம் காயத்திரி ஆகும். மனநிறைவு, நுண்ணறிவு ஆகியவற்றைச் 'சந்தியா வந்தனம்' என்னும் வழிபாட்டின் மூலம் காலை, உச்சிவேளை, மாலை என்ற மூன்று வேளைகளிலும் வணங்கினால் பெறலாம்.

இலக்கியத்தில் சூரியன்

இயற்கைப் பொருள்கள் மக்களின் நலத்திற்குப் பயன்பட்ட திறனை அறிந்த மக்கள் அவற்றின் சிறப்பை அறிந்து வழிபட்டனர். அந்து காலப் போக்கில் இலக்கிய மரபாகிவிட்டது. சங்க இலக்கியத்தில் சூரியனைப் பற்றிக் குறிப்புகள் சில வருகின்றன.

சூரியனை இயற்கைக் கூறாகவும் தெய்வமாகவும் மக்கள் வழிபட்டமை தொல்காப்பியத்தில் பாடாண் திணையில்,

"கொடிநிலை கந்தழிவள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய
வருமே"

என்று கூறுகிறார். சூரியன் ஒளி வழங்கும் ஞாயிறு என்பதை

"பயங்கெழு திருவின பலகதிர் ஞாயிறு
வயங்கு தொழில் தரீஇயல்
வலனேர்பு விளங்கி"

என்ற வரிகள் தெளிவுறுத்தும்.

பகல் நேரத்தை ஏற்படுத்துவது சூரியன் என்ற குறிப்பு "பல் கதிர் மண்டிலம் பகல் செய்து அறறி" என்று அகநானூறு கூறுகிறது. விண்வெளி பரப்பை முகமாகவும் சூரியனும், திங்களும் அம்முகத்திற்கு இரு கண்களாக விளங்குகின்றன என்பதை

"மயங்கிருங் கருவிய விசும்பு முகனாக
இயங்கிய இருசுடர் கண்ணெனா"

என புறநானூறு 365-வது பாடல் கூறுகிறது.

சூரியன் ஏழுகுதிரைகளில் உலகைச் சுற்றுவதைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியமான பட்டினப் பாலையில் வருகிறது. சூரிய ஒளியில் ஊதா முதல் சிவப்பு வரையுள்ள ஏழு நிறங்களை ஏழு குதிரைகளாகக் கற்பனை செய்து அவற்றால் பூட்டப்பட்ட ஒற்றைச் சக்கரத்தேரில் சூரியன் பவனி வருகின்றான் என்பதை

"காய் சினந்த கதிர் செல்வன்
தேர்பூண்ட மா"

என்ற பாடல் அடியால் அறியலாம். இச்சூரியன் விரைந்து இயங்கும் சக்கரம் என்பதை

"இருள் அற
விசும்புடன் விளங்கும் விரைசெலல்
திகிரி"

என அகநானூறு கூறுகிறது. சூரியனைப் பொது நிலையிலேயே திருமுருகாற்றுப் படை,

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு"

என்று கூறுகிறது.

சூரியனின் அந்திக்கால காட்சியைச் சிவனையும் திருமாலையும் இணைப்பதற்குப் பயன்படுத்தியுள்ளனர் சங்ககாலப்புலவர். மேற்கு திசையில் சூரியன் மறையும் போது அந்தி வானம் சிவப்பும், கடல் பரப்பின் நீலமும் ஒன்றாக இணைந்து இருப்பது சிவனும் திருமாலும் இணைந்து தோன்றுவது போலக் காட்சி அளிக்கிறது என்று அகநானூற்றுப் பாடலில்,



திருவண்ணாமலை ஸ்ரீ சூர்யநாராயண சுவாமி கோயில்

" வெருவரு கடுந்திறல் இருபெருந்
தெய்வத்து
உருவுடன இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடுகடலணி கொளாஅ
வந்த மாலே "

எனறு குறிபபு வருகிறது இவவாறு சஙக இலககியஙகளில் சூ ரி ய னே ப பறறிக கூறபபடுகிறது



ஸ்ரீ சுபரமண்ய சுவாமி கோவில் செஞ்சேரி குன்றுகள

பொங்கலில் சூரியன வழிபாடு

சூரியனே நாளதோறும் காலேயில் வணங்கினும் அவனுக்குச சிறபபாக விழாக் கொண்டாடுவது பொஙகல் அனறு ஆகும் பொஙகல விழா ஒரு நனறிவிழா உழவர் திருநாள எனறு கூறுவர் உழவர்கள தாஙகள பயிர் செயததுவளர, மழை, வெபபம் அளித்து பயிரைக காததிடும சூரியனே வழிபடுகின்றனர். உழவர்களே அனறி மறற மக்களும சூரியனே வணங்கு கிறனா பொங்கள கொண் டாடடம் நானகு நாடகள நடைபெறும இவறறுள முதல் நாள போகி, இவவிழா மழைத் தலேவனை இந்திரனுக்குக் கொணடாடும விழா வாகும் அடுத்த நாள பொங்கல் எல்லா பண்டிகைகளும வீட்டின உள்ளே வழிபடட மக்கள பொங்கல் அன்று வீட்டின வாசலில் புதுநெல் அரிசி கொண்டு பொஙகலிட்டுக் கருமபு, மஞ்சள, இஞ்சி, வாழை, பால், நெய முதலிய பொருட்களேப படைத்து சூரியனுக்குக கறபூர ஆரததி எடுத்துப 'பொஙகலோ பொஙகல' எனறு கூவி வழிபடுவா பொஙகல சூரியனுக்குப படைபப தால இதனேப 'பொஙகல் விழா' எனபர் பொங்கல பானேயில பால் எவவளவு பொஙகுகிறதோ அது போனறு வாழககையில இனபம பொஙகும எனபர் இவவாறு பொங்கல் அனறு சூரியனேச சிறப பாக வழிபடுவர்

சூரியன தென திசையை நோக்கிச செலவதை நிறுததிப பொங்கல அனறு இருநது வடதிசை நோக்கி நகரும இதனே 'உததராயணம்' எனறு கூறுவா மேலும சூரயன தனசு ராசியை விடடு மகர ராசிககுப பொங்கல் அனறு வருவதால பொங் கலே மகர சஙகராநதி எனறும கொண்டாடுவா

சூரிய வழிபாட்டின் பயன்

சூரியனே வழிபாட்டால் பல பயன கள கிடைததிருககினறன எனறு புரா ணங்களும காவியஙகளும கூறுகின றன சூரியனேக காலேயில வணஙகு வதால மன அமைதியும நல்ல அறி வையும பெறலாம இராமன ஆதித்யஹருதயம ஜபம செயது தான இராவணனேக கொனறான எனறு இராமாயணம கூறுகிறது சூரிய வழிபாட்டால நோயகள பல நீங்கும மயூரன எனற புலவன சூரய சதகம என்ற நூலேபபாடி நலல பாாவை பெறறான, சாமபன என பவன சூரியனேத தொழுது தொழு நோய நீஙகப பெற்றான அதறகு அவன முலடானநகரில கோயிலெடுத தான இது போனறு பல பயனகள் சூரியனே வழிபடடால் பெறலாம நாமும சூரியனே வழிபட்டுப பல நன மைகளேப பெறுவோம்



ஸ்ரீ காளஹஸதீஸ்வரர் கோயில்,

எம ராஜயலஷ்மி,

# விபூதி தரிக்கும் முறை

திரு க இராமலிங்கம
புதுபபேடடை

திருநீறறின மகிமையை அறியாதார் யாா? மநதிரமாவது நீறு அல்லவா மந்திரமாவதால அது துதிககபபடவேண்டிய ஒளருக அமைவதில் வியபபேதும இல்லை வானவரும தானவரும போற்றிப பரவும அததிருநீறறினை நாம அணிந்து கொண்டு அழகு பெறலாம,வாழவும அழகு மிகுநது காணபபடும

அபபடிபபட்ட பெருமைவாயநத திருநீறறினைப பெரியோர் தர நாம வாங்கி அணிவதில் சில வரைமுறைகளைப பெரியோர் விதித்திருககிறார்கள எபபோதெல்லாம வாங்குவது, எபபடி வாங்குவது என்று விளககியிருககிறார்கள, அவவாறே, எபபடி திருநீறறை தரித்துக்கொளள வேண்டும என்றும நடைமுறைப படுத்தியிருக்கிறார்கள அதனைச சறறு விரிவாகக்காண்போம

*விபூதி வாங்கும் முறைகள்*

குதிரை, சிவிகை, மாடி, திண்ணை ஆகியவறறினடீதிருந்து விபூதி வாங்ககககூடாது பலகை மீது நின்று கொண்டு வாங்கக்கூடாது கொடுபபவா கீழே நிறகவும வாஙகுபவர் மேலே நின்று கொண்டும திருநீறு வாஙகி அணிந்துகொண்டாலும், இரண்டு கைகளால் வாங்காமல், ஒரே கையால் வாங்கினாலும், ஒரு கையினாலும மூன்று விரல்களினால் வாஙகினாலும, வெறறிலைப போட்டுக் கொண்ட வாயுடன வாஙகினாலும, பாதையில நடந்து செல்லும்பொழுதும அசுத்தமான நிலததில் வாஙகினாலும, அநத அசுத்தமான நிலத்தில நின்று விபூதி அணிந்துகொண்டாலும, விபூதியை நமககு ஒருவர் அனபுடன அளிக்கும்போது வாங்காமல் இருபபதோ, அல்லது வாங்குபவாகளைத் தடுபபதோ ஆகியன நரகத்திற்கு வழி காட்டும எனகிறது குமரேச சதகம்

இதிலிருநது நாம தெரிந்துகொளவது என்னவென்றால கொடுபபவரின கை மட்டும் உயாந்திருககக் கூடாது அவரின இடமும உயர்நதிருக்க வேண்டும வாஙகுபவர் கீழே இருந்து பகதியுடன வாஙகித் தரிகக வேண்டும் எனபது வெளிபபடை

*விபூதி தரிக்கும் முறை*

துதிககபபடுவது நீறலலவா? எனவே அதனை நினைககும்போதே பகதி சுரகக வேண்டும அநத திருநீறறினைத தொட்டாலே நாம் பக்தி பரவசததில திளைகக வேண்டும எடுககும்போதே 'சிவ சிவா' என்று உசசரித்து சிவனை நினைத்து மெல்ல எடுககவேண்டும்

அபபடி எடுககபபட்ட விபூதியின ஒரு துகளும பூமியினமீது விழாதபடி அண்ணாந்து காது முதல மறு காது வரை அணிந்து கொளள வேண்டும் அபபடி அணியும்போது துகளகள் கீழே விழத்தானே செயயும அவவிதம் விழும் துகள்கள நேராக தரையை அடையாமல் நமது பருத்த புயங்களில விழும வண்ணம் நாம் அண்ணாந்து பாாக்க வேண்டும் ஒரேயடியாக அண்ணாநது பார்த்தால் துகளகள தரையைத் தொடுமதான குனியாமல் நினறாலும் அபபடியே எனவே நாம அணியும விபூதியில் துகள்கள நமது பருதத புயங்களில் விழும வண்ணம அண்ணாநது அணிய வேண்டும

அவவிதம நிததமும அணிவோர்ககு, விரல்களால நெறறியில் அழுததமாக இறைவனை நினைததுக கொண்டு அணிபவர்களை பாவமே அணுகாது தேகம பரிசுத்தமாகும அபபடி அணிபவர் முகததிலே நிமலன் சக்தியுடன நித்தம விளையாடுவானும முகம பிரகாசிக்கும, சஞ்சலம எதுவும் அணுகாது மோட்ச வீடு கிடடும் இதைவிட ஒரு குறுக்கு வழி நமககுக கிட்டுமா? எனவே மோட்சததை அடையும அநதக்குறுககு வழியில் நாம் அனைவரும செல்வோமா?

அபபடிச் செயயாவிட்டால் நாம் பிறந்ததறகுப பலன்தான் என்ன இருக்கிறது? நமக்கு கை, கால், கண், காது, உடல் ஆகியவை இருந்துஎன்ன பலன என்றுகேட்கிறது குமரேச சதகம்

என்ன செயதால் நாம் அந்த உறுப புககளைப பெற்றிருபபதின பலனை அடைவோம்?

ஆலயத்தைச் சுற்றிவராததாலும், அங்குள்ள தெயவத்தைத் தரிசியாத கண்ணும் இருந்தென்ன பலன்?

தினமும இறைவனின் கமலப பாதத்தை நினையாத மனம இருந்து என்ன பலன? சிவ புராணத்தைக் கேளாத செவி என்ன செவி? விமலனைப பணியாத சென்னி என்ன சென்னி? "அவனுக்குப பணிவிடை செயயாத கைகள் இருந்தென்ன பலன்? நாவார அவன் புகழைப பரவாத வாய இருந்தென்ன பலன்? நாத்தழும்பேறப போற்றிப புகழ வேண்டும் என்று அதனால் தான் சொன்னார்களோ! அவன் தீர்த்தங்களில் மூழ்காத உடல் இருந்தென்ன பயன், அந்த உடல் இல்லாவிட்டால் தான என்ன?

இபபடி பலனே இல்லாமல் வாழ்ந்தால் பாவமதான பற்றும நரகம் அருகில இருக்கும் இறைவனின தாள்களைப போற்றி அவனுக்குத் தொண்டு செயயும பாக்கியம் அடைந்தால் நரகம் நன்று நிலைதனை அடைவோம எனபது நிச்சயம் நரகம் இல்லை என்று ஆகிவிட்டாலே அடுத்தது நம்மை எதிர்நோக்குவது மோட்சமதானே மோட்சம் கிட்ட மோகியுஙகள அதறகு இறையருள் பெற வழிபடுங்கள் ★

# திவ்ய ப்ரபந்த பத இடக்குறிப்பு அகராதி

சில வருஷஙகளுக்குமுன பரபல உபய வேதாநத வித்வான ஒருவர் 'ஆறு வார்த்தை' எனறு ஒரு கடடுரை எழுத முறபடடாா அதாவது திவய பரபநததகதில் 'வாா தகை' என்ற பதம வரும ஆறு இடஙகளை எடுத்து விமர்சிக்க வேண்டும் எனபது அவருடைய எண்ணம ஆனுல அவருக்கு அவவாறு ஐநதே இடஙகள நினைவுககு வநதன ஆறுவது கிடைக்காமல் அவர் மிகக வயாகுலம அடைநதாா கடைசியில பகவானின அநுக்ரஹத்தால் அவருக்கு ஆறுவது இடமும தோனறிறறு அபபோது அவர் தமது நெஞசம நீர்ப பணடமாக உருகிறறு எனறு கடடுரையில விவரிதது அதை முடிததாா

---

திரு லா ஸ்ரீநிவாஸன்,
புதுதிலலி

---

உண்மையில் 'வார்த்தை' எனனும சொல் இருபது இடங்களில வநதுளளது ஆனுல் சிரமபபடடும அவருக்கு ஆறே இடஙகள ஞாபகத்திறகு வந்தன ஆக, எபபடிபபடட பண்டிதனுயிருந்தாலும், திவயபரபநததததைத் தலைகீழாக மனபபாடம செயதிருநதாலும, ஒரு பதம எநதெநத இடஙகளில் வநதுளளது எனறு சொல்வது எளிதல்ல எனபது தெளிவாகிறது

வேதத்திலுளள ஒவவொரு பதமும எங்கு வருகிறது எனபதைக காடட Vedic Concordance (வேத பத இடககுறிபபு அகராதி) வெளியிடடுளளனா, அதேபோல முகயமான உபநிஷததுசகளிலும கதையிலுள்ள ஒவவொரு பதததின இடக்குறிபபையும Concordance of the Principal Upanishads and the Gita எனற அகராதியின மூலம்அறியலாம அவவித அகராதி ஒனறு நமது ஆழவார்கள அருளிச செயத நாலாயிர திவய பரபநததகதிறகு இலலாதது ஒரு பெரும குறையே அபபடி ஒனறு இருநதிருநதால் மேலே குறிதத விதவான ஸுலபமாக 'வாாத்தை' உளள எல்லா இடங்களையும அறிநதிருபபாா

இநதக குறையை நீகக சரணயன ஸங்கலபித்தான மஹாசார்யாகளான பீஷமரும தரோணரும் இருக்க, மனனனுன துர்யோதனனும் இருக்க, அவர்களைவிடடு சதுர்த்தவாணத்தரான விதுரனின அதிதியாகக கணணன இருகக விருமபியது போல, நம் தாசனத்தில மஹா சாாயாகள பலா இருகக, சொலலின மனனர்களான பண்டிதர்கள பலர் இருகக, ஜ்ஞான ஹீனனுன, இலக்கணம் அறியாத, ஒரு வயகதியைக கொண்டு இநத அகராதியை எம் பெருமான பூாதகி செயதுளளான 'உன கருத்தையாவர் காணவலலர்?' (திருச 25) எனறு திருமழிசை ஆழவாா அருளியபடி, பகவானின திருவுளளத்தை யாரே அறியவல்லார்?

இநத அகராதியைத தயார் செயது முடிக்க மூனறு வருஷஙகள ஆயின இதில பாட பேதங்களும் ஒரு அநுபநதமாக இணைககப பெறறுளளது இது கேவலம சொறகளின அகராதி (Index) அலல சொறகள வரும் சொறறொடர்களைக் காண்பிக்கும அகராதி அல்லது Concordance. இது அகார வரிசை கரமம, பரபநத வரிசை கரமம, பாசுர வரிசை க்ரமம ஆகிய மூனறு கரமஙகளையும் உடகொணடது ஒரு தனி விசேஷம

அகார வரிசை கரமமாவது, 'அ' எனற முதல் பதததிலிருநது 'வெளவிய' எனற கடைசிப பதம் வரை வரும சொற்களை எலலாம அகார வரிசையில் ஒழுஙகு படுத்துதல உதாஹரணமாக—

அடியேன, அடியை, அடியோ,
அடியோங்களை,
அடியோமுககு, அடியோமுக்கே,
அடியோமோடும

என்றுபபோல

பரபந்த வரிசை க்ரமமாவது, 'அடியோங்கள' எனற பதத்தை உதாஹரணமாக எடுத்துக்கொண்டால்—

அடியோங்கள அடிக்குடில்—திருபபல்லாண்டு 10

செயவது ஒனறறியா அடியோஙகள—பெரிய திருமொழி 10-2-2

அடியாா அடியோஙகளே—திருவாயமொழி 3-7-10

எனறபடி, முதலில் திருபபலலாண்டு, பிறகு பெரிய திருமொழி, பிறகு திருவாயமொழி எனற கரமம் அதிக சொற்றொடர்கள் உள்ள இடஙகளில் திவய பரபந்தத்திலுள்ள பரபநத வரிசை க்ரமபபடி, அதாவது திருபபலலாணடு, பெரியாழ்வாா திருமொழி, திருபபாவை, நாசசியார் திருமொழி எனற முறையில இராமாநுச நூறறந்தாதி வரை ஒழுங்குபடுத்துவது

பாசுர வரிசை க்ரமமாவது, 'அடியேன' எனற பதத்தை எடுத்துக கொண்டால் இது பெரியாழவார் திருமொழியில் நான்கு இடங்களில் வருகிறது அவை முன்பின இல்லாமல் கீழே காண்பித்தபடி இருத்தல்

அஞசாது அடியேன அடிததேன—பெரியாா 2-7-5

நின அடியேன விண்ணபபம—பெரியாா 3-10-1

மெய அடியேன விண்ணபபம்-பெரியாா 3-10-7

பக்தர்க்கமுதமஅடியேன-பெரியாா 5-2-2

இந்த அகராதியில் ஒரு லக்ஷத்துக்கு மேல் சொறறொடர்களும,20,000க்கு மேல் அகார வரிசைப பதஙகளும் உளளன இது ஆராயசசியாளர்களுக்கு ஓர் அரும்பெரும பொககிஷம

இதில் அரன, ஈசன, சிவன போனற சொறகளை ஆராயநதால, அவை வரும சொறறெடர்களும, பாசுரங்களும தெரியவரும அவற றில் ஆழவாாகள பேசநினற சிவனைப பறறிப போககவும் பேராதபடி பேசி யிருபபனகள யாவையும யாம் எளி தில எயதலாம மேலும, அநத பாசுரங்களின வயாகயானஙகளை ஸேவித்தால, ஆழவார் ஆசாயாகளு டைய ஹருதயத்தை பூர்ணமாக அறிய அரிய வாயபபு உண்டு இது போல எலலா பாயாய (ஒரே பொருள உளள) பதஙகளையும காட டும் ஒரு அநுபந்தம சேர்பபதாக உத்தேசயம அபபோது அதுவே திவய பரபநததறகு ஓா உயாநத விஷய ஸூசிகை (Subject Index) ஆக அமையும

திவய பரபநததைதக கொணடு பல விதங்களில போது போக்கலாம பகவத் விஷய காலக்ஷேபம் செயய லாம, பாசுரஙகளின 'பொருளை பத வுரை, கருத்துரை ஆகியவறறின உதவியைக கொண்டு அறியலாம, அவற்றிலுளள பல விஷயஙகளை ஆராயலாம, பாசுரஙகளை மனப பாடம செயயலாம இவறறுக்கெல் லாம சகதியிலலாவிட்டாலும, கேவ லம சபதஙகளின அழகைக்கண்டே அக மகிழலாம 'வண்டுகிண்டு நறுந் துழாய' எனறு ஒரு ஆழ்வார் பாடி னல, "வணடுகிண்டு தண்டுழாய" எனறு அருள்கிருர் மறறெருவர் இதுபோல் பல

வண்டின ரீஙகாரம எஙகெல்லாம ஒலிககினறது எனறு கேட்டு இனபுற லாம 'வண்டினஙகள பண்பாடும', 'வண்டு இனனிசை முரலும', 'வண்டு குறிஞசி மருளிசை பாடும', 'வண்டு களித திரைககும்' எனறுபபோல அநேகம

எமபெருமானின அவயவஙகளை ஆழவாாகள எவவாறெல்லாம அநு பவிதது ஆழநதனர் என்று கண்டு களிககலாம 'ஆரமார்வன அரங கன' 'மின்செய பூண்மார்பினன',

## விண்ணப்பம்

'ஸபதகிரி' மாத இதழுககான தொகையை 'மணியாாடா' மூல மாக அனுபபுதல பயனுளளதாக அமையும, மணியாாடர் கூபபனில தஙகள முகவரியினை ஆங்கிலததில் எழுதுவதும, பழைய சந்தாதாரராக இருந்தால தஙகள் சரியான சந்தா எணணை மறககாமல் குறிபபதுவும 'ஸபதகிரி' நிருவாகபபணியினை எளிதாக அமைக்கும தொகை அனுபபியும இதழ பெருதவர்கள, தாஙகள் எழுதும புகார்க்கடிதத தில மணியார்டர் எண்,செயத தொகை, அனுபபிய தேதி ஆகிய விவரங களுடன தங்கள முழு முகவரியுடன ஆங்கிலத்தில தொடாபு கொண் டால விரைவில செயலாறற உதவும சந்தாதாராகளின முழு ஒத் துழைபபையும எதிாபார்ககிருேம

— ஆசிரியா

'அல்லி மாதா அமரும திருமார் பினன', எனறுப போல் எண்ணிறந் தவை ஒவவொரு அவயவத்தையும, திருமேனியையும, திருமேனியின வண்ணததையும முடிவிலலாமல் அநு பவிககலாம

அவதாரஙகளைபபறறி ஆழ்வார் கள அருளியிருபபவை யாவறறையும், நாம ஸஙகீாததனத்தின பெருமை களையும மறறும பலவற்றையும் பஹு முகமாக அநுபவித்து ஆனநதக் கட லில் மூழகலாம

ஒரு சொறறெடரை ஒருவர் கொடுக்க, அதன முடிவில்—உளள ஒனறு அல்லது இரண்டு பதஙகளைக் கொண்டு தொடங்கும் வேறு சொற் றெடர் அல்லது சொறறெடாகளை மற்றவர் பதிலாக உரைதது உல் லாஸமாகப போது போககலாம 'பகலவன மீது இயங்காத இலஙகை வேந்தன' எனறு ஒருவா சொனனல், மறறவர் 'இலங்கை வேந்தன இன னுயிர்', 'இலஙகை வேந்தன முடி ஒரு பதும', 'இலஙகை வேநதன வீய' எனறுப போல பல விடைகளை அளித் துக களிககலாம

ஒரே பதம இரு பொருளில வரும பாசுரங்களைக் குறிக்கலாம ஓா ஆழ வாா அருளிய அழகிய சொற றெடரை வேறு ஆழ்வார் அல்லது ஆழவாாகள கையாண்டிருபபதைக கண்டு வியககலாம,

'ஞான மூர்த்தி', 'ஞான மூர்த்தி ஆய', 'ஞான மூர்த்தி ஆயினுய', 'ஞான மூர்த்தியாயை', 'ஞான வெளளச சுடா மூர்த்தி' 'ஞானத்து ஒரு மூர்த்தி', 'ஞான மூர்த்தியினுய' போனற சொறறெடர்களைக் கண்டு ரசிக்கலாம்

'முன' எனற சொல் எந்த பதிகத் தில ஒன்பது முறை காணகிறது? 'முன னம்' எனற பதம எந்தபத்தில் எட்டு முறை உளளது? என்பது போல் ஆராயலாம

'விரும்பி, விருமபா', 'விருமபாத, விரும்பி', 'வைத்தும வையாதும்'— இவை போனற எதிர்பபதங்கள் கொண்ட பாசுரங்கள எங்குள்ளன எனறு தேடலாம்.

'கைத்தலமும் கண்ணும் வாயும', 'கண்ணும வாயும கைததலமும்' எனறுபபோல் முனனுளள சொற் றெடரை மாற்றி உரைககும் வேறு சொற்றெடரைக் கண்டு மகிழலாம

'தன முடிவு ஒனறில்லாத கண் துழாய மாலையினை' எனறு நமமாழ வாா எமபெருமானை வர்ணித்து, அவ வெமபெருமானையே 'என முடிவு காணுதே எனனுள கலந்தானை' என றும அருளினா ஆழவாரை முடிய வும எம்பெருமானும அறியவிலலை யாம ஆழவார்களின திவய பரபந் தததின முடிவையும ஒருவரும காண முடியாது எனபதை இந்த திவய பரபநத இடக்குறிபபு அகராதி தெற் றெனக் காண்பிககிறது. ★

# திருமங்கை ஆழ்வார்

திரு எஸ லக்ஷமி நரசிமமன,
விஜயவாடா-2

"வ்ருச்சிகே க்ருத்திகா ஜாதம சதுஷகமச
சிகாமணிம
ஷட பரபந்த க்ருதம சார்ங்க மூர்த்திம
கலிஹ மாசிரயே"

என அவரது புகழ் பாடி, அவரின் திவய சரித்திரத்தை இங்குக் காண போம

"குலம தரும செல்வம தந்திடும்
அடியார் படுதுயராயின வெல்லாம்
நிலந்தரஞ செய்யும நீள் விசுமபருளும
அருளொடு பெருநிலமளிக்கும
வலந்தரும மற்றும தந்திடும
பெற்றதாயினும் ஆயின செய்யும
நலந்தருஞ் சொல்லை நான் கண்டு
கொண்டேன்
நாராயணா வென்னும நாமம்

என்று பெரிய திருமொழி எனகிற பாசுரத்தில, ஸ்ரீமன நாராயண நாமத்தை அனுதினம ஸ்மரித்தால் கிடைக்கும நற்பலனைக் கண்கூடாகக் காட்டி அருளிய திருமங்கைஆழ்வார், தஞ்சை மாவட்டம் திருவாலி திரு நகரிலே திருக்குறையூர் எனனும் திவ்ய தேசத்தில் கார்த்திகை மாதம க்ருத்திகா நடசத்திரத்தில் அவதரித் தார்

இவருக்கு"நீலநிறத்தார்"என திரு நாமம் சூட்டி அவருக்கு வில், வாள, வேல் வித்தைகளை கறறுக் கொடுத்து மேற்படி வித்தைகளில் அவர் சிறந்து விளங்கச்செயதார்கள இவர் சோழ அரசனிடம் சேனை நாயகராக வும் திகழ்ந்து இருந்தார் இவரது பராக்ரமத்தை மெச்சின அரசர் இவ ருக்கு "பரகாலன" என பட்டம் சூட்டி, திருமஙகை நாட்டின சிறறர சராக ஆக்கினர்

அவவமயம் அந்நாட்டில் அழகு டைய மங்கை ஒருவள ஒரு வைஷணவர் பாதுகாபபில் இருப பதை, ஆழவார ஒறறாகள மூலம அறிந்து அவளை மணம் செயது கொளள விழைநதார் அநத குமுத வல்லிநாசசியாரோ பஞசஸமஸகாரம என்ற ஐவகைச் சிறபபுடைய வைண வர்கள அனறி மற்றொருவரை மணககமாட்டேன என்பதைக கேட்டு நமது ஆழவார் அவவூரில் கோயில கொணடுளள திருநறையூர் பெருமா ளிடம பஞச ஸமஸகாரம பெறறு வைணவராக வந்து நிற்க, மறுபடி யும குமுதவல்லியாா மறறொரு நிபந் தனை அனுஷடிகக வேண்டினர் அதா வது அனுதினம 1008 வைணவர் களுககு அமுது படைதது அவாகளு டைய ஸ்ரீபாததீரத்தமும, தளிகைப பிரசாதமும பெறவேண்டும என்ற இந்த வேண்டுகோளுக்கும் ஆழ வார் உடனபட்டு குமுதவல்லியாரை மணந்து, உடனபாட்டினபடி, ததியா ராதனைகளை சிறபபாக நடததி வந தாா இககாரணத்தால் கபபம் கட்டமுடியவிலலை எனினும காஞசி வரதா அனுககிரகததால் இனனல் தீாககப பெறறூர்

ஆயின சில காலஙகள கழித்து ததியாராதனை செயய பணம இல லாத காரணத்தால், வழிபபறிக் கொளளை செயயத் துணிந்தாா அவ வமயம ஒருநாள ஸ்ரீமன நாரா ணன இவரது வைணவத தொணடை மெச்சி அவரை அனுகிரகிக்கவேணடி திருமணக் கோலத்துடன பெருமாள வர, நமது ஆழவாா அஙகுச சென்று தனம, நகைகள அனைததையும பறித துக கொணடு, காலாழியை கழறற முடியாமல பலலால கடிதது கழறறி னூா இட்சுண்டு இறைவன நமகலி யனே' எனறூா பிறகு பிராட்டி யுடன தம திவய மங்கள விகரகததை சேவை செயதுகொளளச செயது திருமநதிரத்தையும் உபதேசம செய தாா மெயப பொருள உணர்ந்து தெளிந்த பரகாலர் இறைவனை நோககி

"வாடினேன வாடி வருந்தினேன்
மனத்தால்
பெருந்துயரிடும பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தமமோடு
அவர்தம் கலவியே கருதி
ஓடினேன ஓடி உயவதோாபொருளால்
உணர்வெனும பெரும பதம தெரிந்து
நாடினேன நாடி நான கண்டு
கொண்டேன்
நாராயணா வெனனும நாமம"

என்று தொடங்கி வடமொழி வேதங் களுககு ஒபபானதும நமமாழவார் அருளிசசெயலகளுக்கு ஆறு அங்கங் கள்போனறு பெரியதிருமொழி, திருக் குறுநதாண்டகம், திருநெடுந்தாண் டகம திருவெழுகூறறிருக்கை, சிறிய திருமடல, பெரிய திருமடல் எனகிற திவய பிரபநதஙகளை இவவுலகுக்கு அருளி "திருமஙகை ஆழவார்" எனப போறறபபட்டார்

மேலும திருவரங்கத்தில் மதில் கைங்கர்யம் செயதாா பிறகு பெரிய பெருமாளின அருள பெறறு ஆழவார் திருநகரியிலிருநது நமமாழ வாரை எழுநதருளிபபண்ணிக் கொண்டு வந்து மாாகழி மாத ஏகா தசி முதல் திருவாயமொழி உத்ஸவம நடத்திச சிறபபிததார் இதுவே தற போது பகல்பதது இராபபத்து உத்ஸ வம் எனறும, ஆழவார் திருவடித் தொழில் எனறும அழைககபபட்டு, பல வைணவ திவய தேசங்களில தறபோதும நடநது வருகிறது

இவவாறுகப பல பகவத கைஙகாயங கள செயது மஙகளா சாசனபரராய திகழநது இறுதியாக திருக்குருங்குடி சென்று, குமுதவலலி நாசசியாருடன திருநாட்டை அலஙகரித்தாா



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T T DEVASTHANAMS BY K SUBBA RAO, M.A. AND PRINTED AT T T D PRESS BY M VIJAYAKUMAR REDDY MANAGER, T T D PRESS, TIRUPATI-517501



**பாருருவிநீரெரிகால்விசுமபுமாகிப பல்வேறுசமயமுமாய்பபரநதுநின்ற**
**ஏருருவில் மூவருமேயெனநினற இமையவாதமதிருவுருவேறெண்ணுமபோது**
**ஓருருவம பொனனுருமொனறுசெந்தீ ஒனறுமாகடலுருவமொத்துநிறற**
**மூவுருவுமகணடபோதொனறும சோதி முகிலுருவமெமமடி களுருவந்நானே!**

*— திருநெடுநதாண்டகம் - 2*

*அழகிய ஜகததில மூன்று தெயவஙகளே முககியம எனறு சொலலலாம்படி யமைநத தேவதைகளினுடைய ரூபஙகளைத் தனிததனியாகப பிரித்து ஆராயுமிடததில நானமுககடவுளாகிய ஒரு மூர்ததியானது பொனனின வடிவாக உளளது பரமசிவனெகிற ஒரு மூாததியானது சிவநத நெருபபின வடிவாகவுளளது ஸ்ரீமநநாராயணனெகிற ஒரு மூர்த்தியானது கருஙகடல போனற வடிவமாகவுளளது சோநதிருக்கினற மேறகூறிய மூனறு மூாததி களையும பிரமாணஙகொண்டு பரிசீலனை செயயுமிடத்து கடினமான பூமி யெனன, ஜலமெனன, அகனியெனன, வாயுவெனன, ஆகாசமெனன ஆகிய பஞசபூதங்களையும படைததும, பலவாய வேறுபடட சமயஙகளை உடைய தாக இருககும ஜகததை சிருஷடிததும, இபபடி சிருஷடிக்கபபடட ஜகத்திலே அநதர்யாமியாய வியாபித்து நிறகுமதாய பரஞ்சோதியெனறு போறறபபடுவதாய இருக்கினற காளமேக உருவமானது எம்பெருமானுடைய வடிவமாம*